# அந்தமான் கைதி



ஆசிரியர் : கு.சா.கிருஷ்ணமூர்த்தி

# அந்தமான் கைதி

(சீர்திருத்த நாடகம்)



இயற்றியவர்:

கு. சா. கிருஷ்ணமூர்த்தி



விற்பனை உரிமை:

பாரி நிலையம்

59, பிராட்வே · சென்னை-1.

# முன்னுரை

தமிழகத்தின் முதலமைச்சர்
அறிஞர். திரு. சி. என். அண்ணாதுரை

கோட்டை
சென்னை-9
27—5—67.

நண்பர் கு. சா. கிருஷ்ணமூர்த்தி அவர்களின் '**அந்தமான் கைதி**' என் உள்ளத்தைத் தொட்டீர்த்த ஏடுகளில் ஒன்றுகும். பொருந்தா மணத்தின் கொடுமையையும், சமூக சீர்திருத்தவாதிக்கு நேரிடும் கஷ்டத்தையும் உருக்கமாக விளக்கிக் காட்டும் இந்நூல்......... படித்திட மட்டுமல்லாது நடித்திடவும் ஏற்றதோர் நாடக நூல். திரைப்படமாகவும் இதனைக் கண்டு களித்திட வாய்ப்புக் கிடைத்தது.

கற்பனைச் செறிவுடன் அமைந்துள்ள '**அந்தமான் கைதி**' புதிய பதிப்பாக வெளியிடுவது அறிந்து மகிழ்கிறேன். மனித இயல்பு விளக்க ஏடான இந்நூல் ஏற்கனவே மக்களின் நல்லாதரவைப் பெற்றிருப்பதுடன் மேலும் பேராதரவு பெற்றிடும் என்று நம்புகிறேன். நண்பர் கு. சா. கி. அவர்களுக்கு என் பாராட்டுதலை வழங்கி மகிழ்கிறேன்.

அன்பன்

**அண்ணாதுரை.**

# முகவுரை

முத்தமிழ்க் கலா வித்வ ரத்னம்.
ஔவை. டி. கெ. ஷண்முகம்

"அவ்வையகம்"
139, பி. லாயிட்ஸ் சாலை
சென்னை-6.

கவிஞர் திரு. கு. சா. கிருஷ்ணமூர்த்தி அவர்களின் 'அந்தமான் கைதி' மீண்டும் புதிய பதிப்பாக வெளிவருவதை அறிந்து மகிழ்கிறேன்.

"அந்தமான் கைதி" 1945-இல் எங்களால் அரங்கேற்றப் பெற்ற நாடகம், தமிழ் நாடக உலகில் ஒரு மறுமலர்ச்சியைத் தோற்றுவித்த நாடகமென்று பேரறிஞர்கள் பலரும் இதனைப் பாராட்டியுள்ளனர். சமூக நாடக முன்னேற்றத்திற்கு நாடகக் குழுவினரை ஊக்குவித்த பெருமை அந்தமான் கைதிக்கே உரியது.

தமிழகத்திலும், பாரதத்தின் பிற மாநிலங்களிலும், தமிழர்கள் வாழும் பிற மொழி வழங்கும் நாடுகள் பலவற்றிலும் இந்நாடகம் நடிக்கப் பெற்றுள்ளது.

நாடகத்தைக் காண வந்த மக்கள் வெள்ளத்தைக் கட்டுப்படுத்தமுடியாமல் ஒரே நாளில் தொடர்ந்து இரண்டுமுறை நாங்கள் நடித்த நாடகம் ஒன்று உண்டென்றால் 'அந்தமான் கைதிக்கே' அத்தனிச்சிறப்பு உரியது.

1952-இல் முதன் முதலாகத் தமிழ் வளர்ச்சிக் கழகத்தார் நாடக நூலுக்கென்று பரிசு வழங்க முன் வந்தபோது அப்பெருமையும் பெற்றது 'அந்தமான் கைதி' தமிழ்நாடு சங்கீத நாடக சங்கத்தின் சிறந்த நாடக ஆசிரியருக்குரிய விருதை இதன் ஆசிரியர் பெற்றுள்ளார் என்பது குறிப்பிடத் தக்கதாகும்.

இத்தனை பெருமைகளுக்கும் உரிய அந்தமான் கைதி நாடகம். இதுவரையில் ஆயிரக்கணக்கான முறை மேடைகளில் நடிக்கப் பெற்றதோடு திரைப் படமாகவும் வெளிவந்து இலட்சக்கணக்கான மக்களைக் கவர்ந்துள்ளது என்பது பாராட்டத் தக்க தாகும்.

ஆசிரியர் கு. சா. கிருஷ்ணமூர்த்தி அவர்கள் பல்லாண்டுகள் நடிகராக இருந்து நாடக நுணுக்கங் களை நன்கறிந்தவர். அவர் மீண்டும் பல புதிய நாடகங்களைத் தமிழகத்திற்கு ஆக்கித் தரவேண்டும் என்ற என் வேண்டுகோளையும் தெரிவித்துக் கொண்டு அவருக்கு நல்வாழ்த்துக் கூறுகிறேன்.

அன்பன்

**தி. க. ஷண்முகம்**

*26—5—67.*

# என்னுரை

'அந்தமான் கைதி' ஒரு நாடக நூல். இந் நாடகம் அநேகமாக நகரப் பகுதிகளெங்கும் பல்லாண்டுகளுக்கு முன்பே நடிக்கப்பெற்று பத்திரிகைகளாலும் பேரறிஞர்களாலும் பாராட்டப் பட்டிருக்கிறது. திரைப்படமாகவும் வெளிவந்தது.

இத்தனைக்கும் பிறகும்கூட இந்நூல் ஐந்தாம் பதிப்பாக வெளியிட வாய்ப்புப் பெறுவது தமிழக நாடக வரலாற்றில் ஒரு புதுமை!

நாட்டின் தலைமைப் பொறுப்பேற்று ஓய்வு ஒழிவின்றிக் கடமையாற்றும் தற்போதைய சூழ் நிலையிலும், எனது வேண்டுகோளை அன்புடன் ஏற்று இந்நூலுக்கு முன்னுரை வழங்கியுதவிய தமிழகத்தின் முதலமைச்சர் அறிஞர் **அண்ணா** அவர்களின் பேரன்பு என்றும் மறத்தற்பாலதன்று.

அந்தமான் கைதியை அரங்கேற்றி அதன் வெற்றியிற் பெரும் பங்கேற்ற முத்தமிழ்க் கலா வித்வ ரத்ன. ஔவை. தி. க. ஷண்முகம் அவர்கள் அணிந் துரை அளித்துப் பெருமையளித்துள்ளார். மற்றும் இந்நூலை பிழைதிருத்தி அழகுடன் பதிப்பித்தளித்த நாவல் ஆர்ட் பதிப்பக நிர்வாகி திரு நாரா நாச்சி யப்பன் அவர்களுக்கும், இந்த வெளியீட்டிற்கு ஆதரவளித்துதவிய தமிழ்நாடு சங்கீத நாடக சங்கத் திற்கும், இதன் விற்பனை உரிமைப் பொறுப்பை ஏற்றுக்கொண்ட பாரி நிலையத்தாருக்கும் எனது நன்றி.

5—6—67
சென்னை

வணக்கம்
**கு. சா. கிருஷ்ணமூர்த்தி**

# பாத்திரங்கள்

1. **நடராஜன்:** ஓர் சீர்திருத்த ஆர்வமுள்ள இளைஞன். [அந்தமான் கைதி.]

2. **லீலாவதி:** நடராஜனின் தங்கை.

3. **காமாக்ஷி:** நடராஜனின் தாய்.

4. **பாலசுந்தரம்:** லீலாவின் காதலன்.

5. **ஜம்பு:** பாலு, லீலா, இவர்களின் நட்பில் பொறாமை கொண்டவன்.

6. **திவான்பகதூர்:** [பொன்னம்பலம் பிள்ளை] நடராஜனின் தாய் மாமன்.

7. **முனியாண்டிப் பூசாரி:** ஓர் தரகன்.

மற்றும் லேவாதேவிக்காரன், நீதிபதி, ஜூரர்கள், போலீஸ் பத்திரிகை படிப்போர் முதலானவர்கள்.

# அந்தமான் கைதி

## காட்சி 1.

**இடம் :** *அந்தமான் தீவில் கைதிகள் வேலை பார்க்கும் இடம்*

காலம் : *மாலை*

**பாத்திரங்கள் :** *நடராஜன், மற்ருெரு கைதி.*

*[கிழக் கைதி ஒருவன் விறகு உடைத்துக் கொண்டே பாடுகிருன். இசை இன்பத்தில் மயங்கிய மற்ருெரு வாலிபக் கைதி கிழவனை நெருங்குகிருன்.]*

*(கிழக் கைதியின் பாட்டு)*

**இராகம்-கரகரப்பிரியா]** *[தாளம்-ஆதி*

சிந்தையைக் கவர்ந்திடும் இந்திய நாட்டை இந்த
ஜென்மத்தில் காண்பேனே?—ஏந்தன்
அந்திய காலம் வரை அந்த மான் தீவிலேயே
நொந்துயிர் விழ்வேனே? **(சிந்தை)**

கங்கை காவிரி யமுனை கோதாவரியோ டின்னும்
கணக்கில்லா நதியோடி—எங்கும்
பொங்கும் செழுமையும் களிப்பும் தரும் ஜென்ம
பூமியைக் காண்பேனே? **(சிந்தை)**

**வாலிபக் கைதி :** *ஆஹா என்ன இனிமை! என்ன பொருள் நயம்! எங்கே இன்னுமொருமுறை பாடுங்கள் கேட்போம்!*

**கிழக் கைதி:** என்ன! என்பாட்டு அவ்வளவு இனிமை யாகவா இருக்கிறது?

**வாலிபக் கைதி:** ஆமாம். அதிலும் தன் தாய் நாட்டின் பெருமையைக் கேட்பதில் உள்ள இன்பத்திற்கு ஈடு சொல்லவும் கூடுமா?

**கிழக் கைதி:** தம்பி இப்படி உட்கார்; உன் இஷ்டப்படியே பாடுகிறேன்.

[வாலிபக் கைதி உட்காருகிறான். கிழக் கைதி பாட்டின் பிற்பகுதியைப் பாடுகிறான்]

சிற்பம் ஓவியம் கீதம் காவியமோடு—பல
சீர்மிகும் கலைமேவி—இணை
செப்பரிய எனது செல்வத் தமிழ்த் தாய்நாட்டைத்
தெரிசித்து மகிழ்வேனோ? (சிந்தை)

பொன்னும் நவமணியோ டின்னும் பல பொருள்கள்
பொலிவுறும் தமிழ் நாட்டை—எந்தன்
கண்ணாரக் காணமல் என் வாழ்நாளை வீணே
கழித்திங்கு மாள்வேனோ? (சிந்தை)

**வாலிபக் கைதி:** ஐயா! நிம்மதியற்ற இந்த சிறைவாழ்க்கையில் இத்தனை நாட்களுக்குப் பிறகு இன்றைக்குத் தான் என் உள்ளத்தில் இன்ப மலர் அரும்புகிறது. என் தாய்நாட்டு இயற்கை இன்பங்களுக்கிடையே இருப்பதைப் போன்ற இன்ப உணர்ச்சியையே உண்டாக்கிவிட்டது தங்கள் இன்னிசை.

**கிழக் கைதி:** இயற்கைதானே! "பெற்ற தாயும் பிறந்த பொன்னாடும் நற்றவ வானினும் நனிசிறந்தனவே" என்ற மணியுரை அறிஞர்களின் அனுபவ உண்மை

யல்லவா? உம், அதிருக்கட்டும்; உன்னோடு தனித்துப் பேசவேண்டுமென்ற ஆசை; இன்றைக்குத்தான் சந்தர்ப்பம் கிடைத்தது. உன்னைப் பார்த்தால் உயர்ந்த குடும்பத்தில் உதித்த பிள்ளையைப்போல் தெரிகிறது. என் தலைவிதிதான் பதினேழு ஆண்டுகளாக இந்த அந்தமான் தீவில் படாத பாடெல்லாம் படுகிறேன். நீ இந்தச் சிறுவயதில் இவ்வளவு கொடிய தண்டனையடையும்படி என்ன குற்றத்தைச் செய்துவிட்டாய்?

**வாலிபக் கைதி**: ஐயா, இன்ப வேளையில் இந்தத் துர்ப்பாக்கியனின் வரலாற்றைக் கேட்டுக் கொஞ்சம் நிம்மதியாய் இருக்கும் தங்கள் மனத்தையும் கெடுத்துக் கொள்ள வேண்டாம். பிறகு ஒரு நாளைக்குப் பார்த்துக்கொள்ளலாம். இன்றைக்கு நம் நாட்டு அறிஞர்கள் யாராவது ஒருவரைப் பற்றிய கதையைச் சொல்லுங்கள் கேட்போம்.

**கிழக் கைதி** : தம்பி! ஒரு அளவுக்கு மேற்படும்போது இன்பம், துன்பம் இரண்டும் ஒன்றுதான். என்னைப் பொருத்தமட்டும் நிம்மதிக் குறைவென்பதொன்றுமில்லை. உன்னைப் பற்றிய வரலாற்றை அறிய என் மனம் அதிகமாக விரும்புகிறது.

**வாலிபக் கைதி** : ஐயா! தங்கள் விருப்பத்தைத் தடுக்க நான் விரும்பவில்லை. வாருங்கள் இப்படி உட்கார்ந்து பேசலாம்.

[இருவரும் ஒரு பாறைமீது உட்காருகிறார்கள்.]

**வாலிபக் கைதி** : என் சொந்த ஊர் தூத்துக்குடி. என் தந்தை ஒரு பெரிய கப்பல் வியாபாரியாகவும் செல்வந்தராகவும் இருந்தார். எங்கள் ஊரில் என் தந்தைக்கு அபரிமிதமான செல்வாக்கும் மதிப்பும் இருந்தன

எங்கள் குடும்பமும் செல்வபோகத்தில் திகழ்ந்தது. இந்நிலையில் எங்கள் கப்பல் ஒன்று புயலில் சிக்கிக் கவிழ்ந்தது. கோடிக்கணக்கான ரூபாய் இதில் நஷ்டம்; வியாபாரம் நொடித்தது. நஷ்டத்தை ஈடு செய்ய எங்கள் நில புலன்களெல்லாம் விற்றுக் கொடுக்க வேண்டியதாயிற்று. கௌரவத்தோடும் நாணயத்தோடும் வாழ்ந்த என் தந்தைக்கு இச்சம்பவம் பெரும் மனச் சோர்வை உண்டாக்கியது. மனோவியாதியின் காரணமாகவே அவரும் இம் மண்ணுலக வாழ்வை நீத்தார். பலரும் மதிக்க, செல்வத்தில் திகழ்ந்த எங்கள் குடும்பம், அதே ஊரில் சிறுமையிலும் வறுமையிலும் சில நாள் அல்லலுற்றது.

**கிழக் கைதி**: உம், அப்புறம்............''

**வாலிபக் கைதி**: எனக்கோர் தாய் மாமன் இருந்தான். அவன் பணக்காரன்; வறுமையையும் தனிமையையும் நீக்கிக் கொள்ள நினைத்த என் தாய், தன் அண்ணன் பொன்னம்பலம் பிள்ளை இருக்கும் ஊராகிய ஷண்முகநாத புரத்துக்கு, எஞ்சிய சில பொருள்களோடு எங்களையும் அழைத்துக் கொண்டு போனாள். நாங்கள் செல்வாக்கோடு இருந்த காலத்தில் எங்களிடத்தில் அன்பும் மதிப்பும் காட்டிய அதே திவான்பகதூர் பொன்னம்பலம் பிள்ளை, அன்று எங்களைப் புறக்கணித்தார். எங்கள் ஏழ்மையைக் கண்டு ஏளனம் செய்தார். வேறு வழியில்லாத என் தாய் எஞ்சிய பொருளில் ஒரு சிறு வீட்டை வாங்கிக்கொண்டு எளிய வாழ்க்கை நடத்த ஆரம்பித்தாள். நானும் என் தங்கையும் அங்குள்ள பள்ளியில் படித்து வந்தோம். இருந்த பொருள் யாவும் தீர்ந்து விடவே பள்ளிப்படிப்புக்கும் முற்றுப் புள்ளி வைத்துவிட்டு உத்தியோக வேட்டையில் இறங்கினேன். அலையாத இடம் இல்லை. கேட்காத ஆபீஸ்

இல்லை. ஒன்றும் பயனில்லை. வேலையில்லாது வீணுகக் கழியும் என் வாழ்நாளை நல்ல வழிகளில் செலவழிக்க எண்ணினேன். சீர்திருத்தக் கழகமொன்று நிறுவி என்னுலான பொது ஜனத் தொண்டுகளைச் செய்து வந்தேன். ஏழைகளை இம்சித்துப் பொருள்சேர்க்கும் என் மாமனுக்கு இதனுல் என்மீது ஆத்திரம் அதிகரித்தது. என் பொதுப் பணியும் அதோடு வறுமையும் பெருகிக்கொண்டே வந்தன. ஏழைகள் என்னை வாழ்த்தினர். பணக்காரர்கள் தூற்றினர். எங்கள் சங்கத்தின் மூலம் பல விதவா விவாகங்களும் கலப்பு மணங்களும் நிகழ்ந்தன. வெளியுலகம் தெரியாத என் தாய் என்னைச் சதா தூஷிப்பாள். என் தங்கையின் திருமணத்தைக் குறித்தும், எங்கள் வறுமையைப் பற்றியும், நான் கவலையின்றிச் சுற்றுகிறேனென்பது என் தாயாரின் எண்ணம். ஆம்; அன்று ஒரு முக்கியமான பொதுக்கூட்டம்; அதற்காக நான் வெளியே புறப்பட ஆயத்தம் செய்து கொண்டிருந்தேன்.

[கைதி சொல்லும் கதையின் பிற்பகுதி
நிகழ்ச்சியாக வருகிறது.]

---

## காட்சி 2.

---

இடம்: நடராஜன் வீடு. **காலம்: காலை.**

**பாத்திரங்கள்:** நடராஜன், லீலா, காமாட்சி

[லீலா புத்தகம் படித்துக்கொண்டு
இருக்கிருள். நடராஜன் வருகிருன்.]

**லீலா:** எங்கே அண்ணு இன்றைக்கு இவ்வளவு சீக்கிரமாய்ப் புறப்பட்டு விட்டீர்கள்?

**நடராஜன் :** இன்று மாலை டவுன்ஹாலில் ஒரு பொதுக் கூட்டம், எங்கள் கழகச் சார்பில் ஏற்பாடு செய்திருக்கிறோம். அதற்காகத்தான் இன்று சீக்கிரம் புறப்பட்டுவிட்டேன்.

(காமாட்சி வருகிறாள்)

**லீலா :** அண்ணா! அதோ அம்மா வருகிறார்கள்.

**காமாட்சி :** ஆமாம், இதுதான் பொளப்பாப்போச்சு. பின் என்னதான் செய்வே, வேளாவேளைக்குக் கடனோ ஒடனோபட்டுச் சோறு போட நாளொருத்தி இருக்கும் போது ஒனக்கு என்ன கவலை? நீ பாட்டுக்கு ஊருலே உள்ள காலிப்பசங்களை யெல்லாம் சேத்துக்கிட்டு கம்முனாட்டிக்கெல்லாங் கல்யாணம் பண்ணனும்; அவிசாரிகளெயெல்லாங் குடுத்தனக்காரி யாக்கணும் இன்னு பேசிக்கிட்டுத் திரியரே! ஏதுடா கைக் கொசந்தப் பொண்ணு ஒண்ணு ஆளாயி வீட்டுலே இருக்கெ! அதுக்குக் காலாகாலத்திலே ஒரு கல்யாணத்தைப் பண்ணணுமே; எப்படி எப்படியோ இருந்த குடும்பம் இப்படிப் போயிடிச்சே; நம்ம தானே இதெல்லாங் கொண்டு செலுத்தணுங்குற கவலையே மனசிலே வச்சி, ஒரு வேலைவெட்டியேப் பாப்போமின்னு இல்லாமே, காலமெல்லா இப்படி சீர்திருத்தம் மீட்டிங்கு இன்னு சுத்திக்கிட்டு இருந்தா எப்பதான் ஒனக்குக் குடும்பக் கவலை தெரியிறது? நீயென்ன சின்னப் பிள்ளையா?...உம் (பெரு மூச்சிட்டு) என்னமோப்பா நீ செய்றது எனக்கொண்ணும் புடிச்சுக்கெல்லே. ஒங்குடும்பத்தே நீயே பார்த்துக்க. நான் எங்கேயாவது போயிடுறேன். எனக்கென்ன? கால் வயித்துக் கஞ்சிதானே?

**நடராஜன்:** உம்; முடிந்ததா ராமாயணம்? இல்லை...... இன்னும் ஏதாவது இருக்கா?

**காமா:** பொறந்தவள் ஒருத்தி இருக்காளேன்னு வரப் போவ இருந்த அண்ணனையும் இந்தப் பக்கமே வராமேப் பண்ணிட்டே, அவரும் நம்பளெ திரும்பிப் பாத்து வருஷம் ரெண்டுக்கு மேலே ஆச்சு. அவரெப் பகைச்சிக்காமெ இருந்தால் ஏன் நமக்கு இந்தக் கஷ்ட மெல்லாம்? இந்த ஊருலே அவரெவிடப் பெரிய மனுஷென் யாரு இருக்கா? அவர் மனசுவச்சா நம்மளும் நாலுபேருக்குப் பெருமையாத்தான் இருக்கலாம். (முந்தானையால் கண்ணைத் துடைத்துக் கொள்ளுகிறாள்.) ஊம் அதெச் சொல்லி யென்ன பிரயோசனம்? என்னமோ அப்பா போனதெல்லாம் போகட்டும். இந்தா பாரு நடராஜா! அவர் யாரு? ஒன் தாயோட பொறந்த மாமன்தானே? "மாமா! நான் இப்படியெல்லாங் கஷ்டப்படறேன். எனக்கு இதைச் செய்......"

**நடராஜன்:** போதும் போதும். அவன் பெரிய மனிதனாயிருந்தால் அவன் மட்டில் இருக்கட்டும்; இல்லை, அவன் குபேர சம்பத்தில் நீயும்போய் அனுபவி. என்னுடலில் உயிர் உள்ளவரை நான் யாரையும் கெஞ்சத் தயாராயில்லை.

**காமா:** ஆமாம்......சொல்லப்போனக் கோவம் மட்டும் வந்துவிடும். ஏன், நீயாத்தான் ஒரு வேலையைப் பாத்து இருக்கிறதுதானே?

**நடராஜன்:** பார்க்காமலா இருக்கிறேன்? பார்த்துக் கொண்டுதான் இருக்கிறேன். ஊர் இருக்கும் நிலை உனக்கெங்கே தெரிகிறது? பி. ஏ., எம். ஏ. படித்தவனெல்லாம் பத்து ரூபாய் சம்பளத்துக்குப் பஞ்சாய்ப்

பறக்கிற இந்தக் காலத்திலே பத்தாவது படித்த நான் என்ன பண்ணுவதென்றுதான் தெரியவில்லை.

**காமா:** அதென்னமோப்பா, நான் சொல்லறதைச் சொல் லிட்டேன். இன்னமே நான் இந்தக் கண்ருவிகளை எல்லாம் பார்க்காமே எங்கேயாச்சும் போயிடப் போறேன். என்னை நம்பாதே, ஆமாம்.

**நடராஜன்:** அடாடாடா! இதென்ன பெரிய தொல்லையா இருக்கிறதே.

(நடராஜன் போகிருன்)

**காமா:** என்னடா நான் சொல்லிக்கிட்டே இருக்கேன்; நீ போயிக்கிட்டே இருக்கிறியே!

**நடராஜன்:** நீ சொல்லிக்கிட்டே இரு. நான் போய்கிட்டே இருக்கேன்.

(போய்விடுகிருன்)

**லீலா:** ஏம்மா! நீ எப்பொழுது பார்த்தாலும் அண்ண னிடம் இப்படியே சிடுசிடென்று பேசிக் கொண்டிருக் கிருய். அண்ணன் என்ன சிறு பிள்ளையா? அவருக்கு மட்டும் நம் குடும்பக்கவலை யில்லாமலா இருக்கிறது? அவரும்தான் எவ்வளவோ பிரயாசைப் படுகிருர். என்ன செய்யலாம்? வேலை கிடைத்தால்தானே?

**காமா:** ஆமாடி ஆமாம், இப்படிக் காலிப்பசங்களோடவே சேர்ந்துக்கிட்டு ஊரைச் சுத்திக்கிட்டே இருந்தா, வேலை தான வந்து ஐயா கைமேலே கெடைக்கும். மூதேவி, அவங்கூடப் பொறந்தவதானே நீ. அவ னுக்கு மேலே பேசமாட்டே. போடிபோ, வேலையைப் பாருடி, வாயாடி.

## காட்சி 3.

---

இடம்: *திவான் பகதூர் மாளிகை.*

காலம்: *காலை.*

பாத்திரங்கள்: *திவான் பகதூர், ஜம்பு.*

[*ஜம்பு, தபால்களை உடைத்து ஒவ்வொரு படமாக எடுத்துக் காட்டுகிறான். திவான்பகதூர் பார்வையிடுகிறார்.*]

**ஜம்பு:** *ஜானகி, வயது 17. இதைப் பார்த்தீர்களா?*

**பொன்:** *எங்கே! சேச்சே. இதென்ன மூஞ்சுறு மாதிரி யிருக்கு.*

**ஜம்பு:** *இதைப் பாருங்கள்!*

**பொன்:** *அடே அப்பா! இதென்ன வைக்கோல் போர் போல் இளைத்துப்போய் இருக்கிறது! இதை யார் கட்டிக்கொண்டு மாரடிப்பது? சேச்சே, ஒன்றுவது உருப்படியா யில்லையே.*

**ஜம்பு:** *இந்தப் படம் கொஞ்சம் சுமாரா......*

**பொன்:** *வயசென்ன? பதிமூணு! சேச்சே. மொகறையைப் பாரு, கிழட்டுக்களை அப்படியே தாண்டவமாடுதே.*

(*சமையல் கணபதி ஐயர் வருகிறார்*)

**கணபதி:** *மணி 12 ஆச்சு, சாப்பாட்டை முடிச்சுண்டு சாவகாசமாய்ப் பார்க்கலாமே தபாலே.*

**பொன்:** *அட இரைய்யா, சாப்பாடுதானு பெரிசு...*

**ஜம்பு:** *ஓய் கணபதி ஐயர், உமக்கு சமய சந்தர்ப்பம் ஒன்றுமே தெரிவதில்லை.*

**கணபதி:** மன்னிக்கணும். நான் ஏதாவது ஒன்று செலக்ட்டு ஆயிருக்கும்னு நெனேச்சேன்.

**பொன்:** என்னத்தை செலக்ட்டு ஆகிறது. எல்லாம்தான், தாடகையும் சூர்ப்பநகையுமா இருக்கே.

**ஜம்பு:** எனக்கு அப்பொழுதே தெரியும். நாலாந்தாரம் என்று விளம்பரம் செய்தால் இப்படிக் கழுசடை விண்ணப்பங்கள்தான் வருமென்று.

**பொன்:** இந்த யோசனையை நீ ஏன் முன்பே சொல்லக்கூடாது?

**ஜம்பு:** சொன்னல்...நீங்க ஏதாவது......

**பொன்:** ஆமாம், நீங்க; நீங்க என்ன? விஷயத்தை விவரமாகச் சொன்னல் 'சரிதான்' என்று சொல்லிவிட்டுப் போகிறேன்......உம் அது போகட்டும்; விளம்பரத்தில் எப்படிப் போட்டிருக்கிறது? அதைப் படி பார்ப்போம்.

(ஜம்பு பத்திரிகையை எடுத்துப் படிக்கிருன்)

---

## மணமகள் தேவை!

**சுமார் 20 லக்ஷ ரூபாய்க்கும் மேற்பட்ட சொத்தும், செல்வாக்கும், அந்தஸ்தும் உள்ள ஒரு பிரபுவுக்கு நாலாந்தாரமாக ஒரு மணமகள் தேவை. பெண் அழகும், சொத்துக்களைக் காப்பாற்றும் ஆற்றலும், கல்வியறிவும் உள்ளவளாக இருக்க வேண்டும். விருப்ப முள்ளவர்கள் கீழ்க்கண்ட விலாசத்திற்குப் புகைப்படத்துடன் எழுதவும்.**

---

**பொன்:** நாலாந்தாரம் என்பதைக் குறிப்பிடா விட்டால், பிறகு ஏதாவது குற்றம் வருமே என்றுதான் பார்த்தேன். (மற்ருெரு படத்தைப் பார்த்து)

அடடே! இவள் சினிமாவிலே ஆக்டுப்பண்ணி இருக்காளாம்...பாரப்பா! பெரிய ஸ்டார் போலே இருக்கு. சுலோசனுவாம்.

**ஐம்பு:** சுலோசனுவா?......

**கணபதி:** அப்படி ஒரு ஸ்டாரே இல்லையே......? ஏதாவது எக்ஸ்ட்ராவா வந்திருக்கலாம்.

**பொன்:** பாதகமில்லே, சுமாரா இருக்கா. ஆள் கருப்பா செகப்பாங்கிறது தெரியலையே.

**ஐம்பு:** கலர் போட்டோவா இருந்தாத் தெரியும். புடிச்சிருந்தா நேரிலேயே பார்த்துடலாமே?

**கணபதி:** சிகப்பைவிட கருப்புதான் அழகு. மன்மதன் கருப்புத்தானே. மகாவிஷ்ணு, கிருஷ்ணன், ராமர் இவர்களெல்லாம் கருப்போ இல்லையோ.?

**(முனியாண்டி பொடி உறிஞ்சியபடி வருகிறுன்)**

**முனி:** மகமாயி!......நமஸ்காரம் வருதுங்க.

**பொன்:** ஓ, பூசாரியா! வாய்யா, வா, முனியாண்டி, இங்கே பார்; இந்தப் பெண் புடிச்சிருக்கா பார்.

**முனி:** யாருக்கு?

**பொன்:** அட நமக்குத்தானையா பார்.

**முனி:** பொண்ணு இது?

**பொன்:** ஏன்?

**முனி:** (ஐயரையும் போட்டோவையும் பார்த்து) ஓஹோ நம்ம கணபதி ஐயர் சாமி பொம்பளே வேஷம் போட்டுருக்காபோலிருக்கு!

**பொன்:** ஆமாம், கொஞ்சம் ஸ்டௌட்டாத்தான் இருக்கு.

**ஐம்பு:** உங்களுக்கு ஏன் இவ்வளவு கவலே? வெண்ணேயை வைத்துக்கொண்டு நெய்க்கு அலேவதைப்போல இருக்கிறதே! கையிலேயே தங்க விக்ரகம் போன்ற பெண்ணே வைத்துக்கொண்டு ஏன் இவ்வளவு தூரம் யோசிக்கவேண்டும்?

**பொன்:** கையிலேயே பெண் இருக்கிறதா?.........உம், அது யாரு?

**ஐம்பு:** உங்கள் தங்கை மகள் லீலாவைத்தான் சொல்லு கிறேன். லீலாவுக்கு மேல் அழகான பெண் இந்த உலகத்திலேயே கிடைக்காதே.

**பொன்:** யார்! நடராஜன் தங்கையையா சொல்லுகிருய்? சேச்சே! குடிக்கக் கூழுக்கும் வழியில்லாத அந்தப் பொறுக்கி நாய் வீட்டிலா நான் சம்மந்தம் செய்வது? ஊ ஹூம். அந்த அயோக்கியக் கழுதையின் உறவே வேண்டாமென்று தள்ளி வருஷம் இரண்டுக்கு மேலா கிறதே. இனிமேல் இறந்தாலும் அவன் முகத்தில் விழிக்கலாமா? (பல்லேக் கடித்துக்கொண்டு) என்ன மமதை அவனுக்கு, கிழட்டுப் பிணமாம். நாஞ கிழட்டுப் பிணம்? அவஞ என்னேப் பார்த்துக் கிழட் டுப் பிணமென்று சொல்வது? இருக்கட்டும்.

**முனி:** என்ன உங்களேப் பார்த்தா அவன் கிழவனென்று சொன்ஞன்? முட்டாள், அப்போது நான் இல்லாமற் போய்விட்டேனே! உம்......அவன் ஏன் ஏஜமான், உங்களேப் பார்த்துக் கிழட்டுப் பிணம்னு சொன்ஞன்?

**பொன்:** ஒன்றுமில்லே; முன்பு இங்கே பூச்செடிகளுக்குத் தண்ணீர் எடுத்து ஊற்றிக்கொண்டிருந்தாள் ஒரு குட்டி; சின்ன வயது.

**முனி** : கடைந்தெடுத்தமாதிரி. பொடிசு.

**பொன்** : ஆமா, மிகவும் ஜோராக இருப்பாள். ஒருநாள் என்னமோ தோட்டத்துப் பக்கம் போனபோது (கணபதி ஐயரைப் பார்த்து, "அட போயேய்யா, போய் எலெயெப் போடும். இதோ வருகிறேன். வாயைப் பிளந்துகொண்டு நிற்கிறீரே." ஐயர் போகிறார்.) அங்கே வேறு ஒருவருமே இல்லை. ரொம்ப ஏழை. சரிதான் ஏதோ கால் அரை கொடுப்போம் கழுதை பிழைத்துப் போகட்டும் என்று நினைத்துக் கூப்பிட்டேன். அவளும் வந்தாள். உம் வந்தாளா?

**முனி** : ஹூம் வந்திருப்பாள், வந்திருப்பாள்; வந்துதானே ஆகவேணும். சமுகத்திலே விரும்பிக் கூப்பிடும் போது அந்தக் கழுதை எப்படி மறுக்க முடியும்?

**பொன்** : உம் அப்படிச் சொல்லு! அது தானே நியாயம்?

**முனி** : ஆமாம்! ஆமாம்! அதுதான் நியாயம், நியாயம் இங்கே இல்லாமல் வேறே எங்கே இருக்க முடியும்?

**பொன்** : வந்தாளா? வந்தவள், ரொம்ப நாணிக்கோணிக் கொண்டு கொஞ்ச தூரத்திலேயே நின்றாள்.

**முனி** : சரிதான் ரொம்பப் புதுசுபோலே இருக்கு.

**பொன்** : எல்லாம் நாம் தான் சரி பண்ணிக்கொள்ள வேண்டும் என்று நினைத்து மெள்ளக் கையைப் பிடித்தேன். பிடித்தேனா? அவ்வளவுதான், அவள் ஒரே சத்தம் போட ஆரம்பித்துவிட்டாள். இதற்கு நானா பயப்படுகிறவன்?

**முனி**. அவ பயந்துட்டாளோ?

**பொன்** : உம், ஆமா ரொம்பப் பயந்துட்டா; இருந்தாலும் நானா விடுறவன்?

**முனி:** சபாஷ் அதுதான் சரி. எஜமான் புடிதான் உடும்புப் புடியாச்சே 'ம்' அப்புறம்?

**பொன்:** அப்புறம் என்ன? அதே சமயத்திலே அந்தத் தோட்டத்து ரோட்டுப் பக்கமாக அந்த அயோக்கியப் பயல் போய்க் கொண்டிருந்திருக்கிறான்.

**ஜம்பு:** யாரு! அந்தக் குட்டியினுடைய புருஷனு?

**பொன்:** அட இல்லையப்பா! நீ ஒரு பக்கம். அவசரப்படுகிறாயே!

**முனி:** கணக்குப் பிள்ளை ஐயாவுக்கு வயிறு பசி வந்துட்டாப் போலேருக்கு.

**பொன்:** அந்தப் பக்கமாக இந்த நடராஜன் போயிருக்கிறான். தெருவோடு போகிறவன் இவன் பாட்டுக்குத்தானே போகவேண்டும்?

**முனி:** ஆமாம், போகாமல் என்ன செய்தான்?

**பொன்:** ஊஹூம், அந்தப் பரதேசிப் பயல் என்னை என்ன செய்ய முடியும்? புலிமாதிரி ஒரே தாவாகத் தாவி சுவரைத் தாண்டித் தோட்டத்துக்குள்ளே வந்தான். என்னைப் பார்த்தானோ இல்லையோ, அப்படியே அசந்து நின்றுவிட்டான். என்மேல் விரலைப் போட முடியுமா என்ன?

**முனி:** நல்லாருக்கு, உங்க பார்வைதான் ராஜ பார்வையாச்சே! முடியுமா? இது என்ன விளையாட்டா இருக்கிறது? எனக்குத் தெரியாதா என்ன தங்கள் பராக்கிரமம்?

**பொன்:** என்னைக் கண்ட உடனே கையை நீட்ட முடியவில்லையா? கையாலே ஆகாத கழுதை என்ன செய்தான் தெரியுமா?

முனி : என்ன செய்தான்?

பொன் : என்ன செய்யிறது? என்னமோ எனக்கு முன்னே பிறந்தவன் மாதிரி நியாயமும் நீதியும் பேச ஆரம்பித்து விட்டான்! பேச்சோடு பேச்சாக "பாவி, சண்டாளா, காமப் பிசாசே, கிளட்டுப் பிணமே" என்று என்னென்னவோ பேசிவிட்டான். வேலைக் காரப் பயல்களைக் கூப்பிட்டு அவனைக் கட்டிவைத்து உரித்துவிடலாமென்று நினைத்தேன். ஆனால் அதற்குள்ளே அந்தக் குட்டியையும் கூட்டிக்கொண்டு ஓடிப்போய் விட்டான். அயோக்கியப்பயல்.

முனி : சரிதான் அவங்களுக்குள்ளே அதுக்கு முன்னே தொடர்பு இருந்துருக்கும் போலிருக்கு.

ஐம்பு : அவனைச் சும்மாவா விட்டீர்கள்? மடப்பயல்! அந்தக் காலமெல்லாம் மலையேறிப்போய் விட்டது. அப்பொழுது கொஞ்சம் பசை இருந்தது. அதுதான் அப்படிப் பேசி இருக்கிறான். இப்பொழுது ஏக வரகை. வீட்டைக்கூட நம் ராமசாமி சேர்வையிடம்தான் ஈடு வைத்திருக்கிறான். இனிமேல் உங்கள் தயவை நாடித்தான் ஆகவேண்டும்.

முனி : யாரு! நம்ம குண்டோதரன் சேர்வை கிட்டையா? அப்ப இனிமே ஒங்க தயவே நாடித்தான் ஆகணும்.

பொன் : யார்? அவனு! பிச்சை யெடுத்தால் கூட அவன் விரைப்பு அவனை விட்டுப் போகாது. அது கிடக்கப்பா விடு; அவள் என்ன பெரிய ரதியோ? அவளை விட்டால் உலகத்திலே வேறு பெண்ணே கிடைக்காதா என்ன! காசை விட்டெறிந்தால் எத்தனையோ கழுதை.

முனி : கழுதை மட்டுமென்ன, குதிரை, ஆடு, மாடு, நாய், பன்னி யெல்லாங் கிடைக்கும்.

**ஜம்பு :** *நீங்கள் லீலாவைச் சிறு பிள்ளையில் பார்த்தது தான் போலிருக்கிறது! அதனுல்தான் இவ்வளவு அலட்சியமாய்ப் பேசுகிறீர்கள், இப்பொழுது லீலாவைப் பார்த்தால், ஆஹா......உயிரையே கொடுத்து விடமாட்டீர்களா! இதோ பாருங்கள் இந்தப் படத்தை. ரொம்பக் கஷ்டப்பட்டு உங்களுக்காக இதை ஒரு இடத்திலிருந்து வாங்கிக்கொண்டு வந்தேன்.*

*[படத்தைக் கொடுக்கிறுன். திவான் பகதூர் பார்த்துப் பிரமிக்கிறுர்]*

**பொன் :** *யார், இது? என் தங்கை மகள் லீலாவின் படமா? உம்! - உண்மையாகவா? அடடே என்ன ரம்பை மாதிரியல்லவா இருக்கிறுள்! நான் ரொம்பச் சின்னப் பிள்ளையாக இருக்கும்போது பார்த்தது. பெரிய மனுஷி ஆனபிறகு பார்த்ததே இல்லே. உம்... ஜம்பு! இவளே நான் எப்படியும் கல்யாணம் செய்துதான் ஆகவேண்டும். இவ்வளவு நாளாக எனக்கு இந்தத் தகவல் தெரியாமல் போய்விட்டதே! பூசாரி, பாரையா, எப்படி?*

**முனி :** *ஆஹா! வெகு பொருத்தம். அநியாயமா அமைஞ்சிருக்கு.*

**பொன் :** *ஓய்—கணபதி ஐயர்!*

**கணபதி :** *இதோ வந்துட்டேன். (வருகிறுர்)*

**ஜம்பு :** *இதென்னையா கரண்டியோட......!*

**கணபதி :** *பால் அடுப்பிலே இருக்கு.*

**பொன் :** *இந்தப் படத்தைப் பாரும்! எப்படி?*

**கணபதி :** *எங்கேயோ பார்த்தாப்போல......ஓ, நம்மப் பாலுக்கார முத்தம்மா மகளோ?*

**ஐம்பு :** ஓய்! நம்ம எஜமான் தங்கை மகளய்யா.

**கணபதி :** அப்படியா! பேஷ் நன்றாயிருக்கு.

**பொன் :** நமக்குப் பொருத்தமா இருக்குமா?

**கணபதி :** ஆஹா! இட்டலியும் சாம்பாரும் போலே, பூரியும் மசாலாவும் போலே, பாலும் ஜலமும் போலே, வெகு பொருத்தம்.

**ஐம்பு :** பார்த்தீர்களா! நீங்கள் அந்தப் பெண்ணைப் பார்த்தால் விடமாட்டீர்களென்று நான் முன்பே சொல்லவில்லையா; சரி, பிறகென்ன யோசனை? எப்படியாவது நடராஜனை சரிக்கட்டிக் காரியத்தை முடிக்க வேண்டியதுதான்.

**பொன் :** காரியத்தை முடிக்க வேண்டியதுதான். ஆனால், அந்தப் பயல் விஷயம்..... !

**ஐம்பு :** நீங்க என்ன எஜமான், இப்படி யோசிக்கிறீர்கள்; அவன் ஏக லாட்டரி என்று சொல்லுகிறேனே!

**பொன் :** உம்; இன்னைக்கு என்ன கிழமை?

**முனி :** வெள்ளியோட வெள்ளி அஞ்சு—சனி......

**ஐம்பு :** அட என்னையா ஔர்றே. செவ்வாய்க்கிழமை.

**முனி :** ஆமா ஆமா!

**பொன் :** சேச்சே. நாள் நல்ல நாளா இல்லையே! ஓய் கணபதி ஐயரே! பஞ்சாங்கம் எடுத்தாய்யா.

**கணபதி :** பஞ்சாமிர்தமா?

**பொன் :** இல்லை. பால் பாயாசம்.

**கணபதி :** இன்னைக்குப் பால் பாயாசம் செய்யலையே!

**பொன் :** உம்மத் தலைமண்டை, பஞ்சாங்கத்தை எடுத்தாய்யான்னு......

**கணபதி :** ஓ! பஞ்சாங்கமா (உள்ளே ஓடுகிறான்)

**முனி :** பஞ்சாமிர்தம் இருந்தாலும் கொஞ்சம் கொண்டாருமே! சாப்பிடலாம்.

**பொன் :** ஆமாம், ஆமாம். சரி நாளைக்குக் காலையில் அவசியம் போக வேண்டியதுதான். ஐம்பு! நீ மகா புத்திசாலியாக இருக்கிறாயே! நீ மட்டும் இந்தப் படத்தைக் காட்டாமல் இருந்திருந்தால் அநியாயமாய் நான் இந்த அழகு ராணியை இழந்திருக்கவேண்டியதுதானே?

**ஐம்பு :** (தலையைச் சொரிந்த வண்ணம் நெளிந்துகொண்டு) ஆமாம், ஆமாம்; இந்தப் படத்தை அந்தப் போட்டோக்கிராப்பர் சாமான்யமாகவா கொடுத்தான்?

**பொன் :** பிறகெப்படி வாங்கி வந்தாய்?

**ஐம்பு :** பிறகு என்ன? எஜமானிடம் சொல்லி ஏதாவது 'சம்திங்' வாங்கித் தருவதாகச் சொல்லித்தான் வாங்கினேன். நமக்குக் காரியம் அவசியம் பாருங்கோ!

**பொன் :** பேஷ்! அதுதான் சரி. இந்த மாதிரிக் காரியங்களிலெல்லாம் பணத்தைப் பொருட்படுத்தலாமா? (சட்டைப் பையிலிருந்து மூன்று பத்து போய் நோட்டுகளை எடுத்துக் கொடுக்கிறார்) இந்தா இதை அவனிடம் கொடு. இதை நீ செலவுக்கு வைத்துக் கொள்.

**ஐம்பு :** பரவாயில்லை! எனக்கெதற்கு இப்பொழுது...... (ஐம்பு மரியாதையோடு வாங்கிக்கொள்கிறான்)

**பொன் :** பரவாயில்லை. சும்மா செலவுக்கு வைத்துக்கொள். நாளைக் காலை புறப்பட வேண்டும். பழங்கள் மிட்டாய் வகைகள் எல்லாம் வாங்கிவைக்க ஏற்பாடு செய். ட்ரைவரிடமும் சொல்லித் தயாராய் இருக்கச்

சொல். (மறுபடியும் இரண்டு நோட்டுகளைக் கொடுத்து) இந்தா இதையும் வைத்துக்கொள். எதற்கும் உன் கையில் பணம் இருப்பது நல்ல தல்லவா?

**முனி :** ஆமாம், ஆமாம். ரொம்ப அவசியம்! கணக்கப் பிள்ளை ஐயா கிட்டேப் பணம் இருக்க வேண்டியது ரொம்ப அவசியம்.

**பொன் :** சரி, நான் வரட்டுமா, நான் சொன்னதெல்லாம்...

**ஐம்பு :** ஆஹா அதைவிட எனக்கென்ன வேலை?

**முனி :** அப்போ! நானும் போயிட்டு வரட்டுங்களா?

**பொன் :** சரி. போயிட்டு வா.

**முனி :** சில்லரை யேதாவது......

(ஒரு நோட்டைக் கொடுக்கிறார்)

**முனி :** (வாங்கிக்கொண்டு) மகமாயி......நான் வருகிறேன்.

**பொன் :** ம்-ம், போயிட்டு வா...ம். ஐம்பு! நான் சொன்ன தெல்லாம் ஞாபகமிருக்கட்டும்.

**ஐம்பு :** அதுக்கு நாணுச்சிங்க. (பொன் போகிறார்)

**ஐம்பு தனிமொழி :**

லீலா! நீ பாலசுந்தரத்துடன் நடத்தும் காதல் நாடகம் எத்தனை நாளைக்கென்று பார்ப்போம். அவனுடன் சேர்ந்துகொண்டு பள்ளியில் பலர் முன் என்னை அவமதித்தாயல்லவா? இருக்கட்டும்! எப்படியும், என்றைக்காவது ஒரு நாளைக்கு இந்தக் கைகள் உன்னைத் தழுவாமலா போகும்?

## காட்சி 4.

---

**இடம்:** *பூந்தோட்டம்* *காலம்: மாலை*

**பாத்திரங்கள்:** *லீலா, பாலு, நடராஜன்.*

[*லீலா ஒரு கல்லின்மீது அமர்ந்து பாடிக் கொண்டிருக்கிறாள்*]

(*பாட்டு*)

இன்பம் இன்பம் எழில்மிகும் அதிசய
மலர் வனமே ! (இ)

இன்னிசைக் குயில்கள் இதயம் மகிழ
எங்கும் கூவுதே ! (இ

தென்றலினால் தேகமும் சிலிர்த்திடுதே!
சிந்தை குளிர்ந்திடுதே !
செல்வ மணாளனைக் காணேன் ! (இ)

மாலையும் போகுதே ! காலம் வீணாகுதே!
காதலன் வரவைக் காணேன்! (இ)

[*பாலு பின்புறமாக வந்து லீலாவின் கண்ணைப் பொத்துகிறான். திடுக்கிட்டுத் திரும்புகிறாள்*]

**பாலு :** *லீலா! லீலா! இதோ பார், என்னுடன் பேச மாட்டாய்? (முகத்தைத் திருப்பிப் பார்த்து) ஹா! இதென்ன கண்ணீர்? ஏன் அழுகிறாய்? இங்கே பார். என்னைப் பார்க்க மாட்டாயா? ஓஹோ! உன்னிடம் நான் சொன்னபடி நேற்று வரவில்லை யென்ற கோபம்தானே? எனக்குத் தெரியும்! இப் படி யெல்லாம் ஆகுமென்று சொன்னால் கேட்கிறார் களா? சுத்த மடையர்கள், பிரன்ஸ்களாம் பிரன்ஸ். நான் என்னென்னவோ சாக்குப் போக்குகள்தான்*

சொன்னேன்; கேட்கிறீர்களா? விடாப் பிடியாகச் சினிமாவுக்கு இழுத்துக் கொண்டு போய்விட்டார்கள். நான்கு பேர் பிடிவாதம் செய்யும்போது எப்படி மறுக்க முடியும்?

**லீலா :** *இன்றைக்கு மட்டும் ஏன் வந்தீர்கள்? யாரும் சினிமா ட்ராமாவுக்குக் கூப்பிடவில்லை போலிருக்கிறது?*

**பாலு :** *(சிரித்துக் கொண்டே) எனக்கு அதுதானா வேலை? லீலா, ஏதோ ஒரு நாளும் கூப்பிடாதவர்கள் கூப்பிடுகிறார்களே என்று போய்விட்டேன். இதற்காக இப்படிக் கோபிக்கலாமா?*

**லீலா :** *ஒருவரிடம் வருவதாக வாக்குக் கொடுத்தால் தலை போகிற காரியம் வந்து தடுத்தாலும் வந்துதான் தீர வேண்டும். அப்படிச் செய்யாதவர்களை எனக்குப் பிடிப்பதே இல்லை. இது நம்மவர்களிடம் உள்ள ஒரு பெரிய கெட்ட பழக்கம்.*

**பாலு :** *வாஸ்தவந்தான்; இந்தியர்களுக்குப் "பன்ச்சுவாலிட்டி"யே இல்லை யென்று எல்லோரும் தான் சொல்லுகிறார்கள். ஆனால், நான் உன் விஷயத்தில் மட்டும் இனிமேல் நீ சொன்ன சொல்லைத் தவறவே மாட்டேன். போதுமா? இதற்காகச் சிறு குழந்தையைப் போல் அழலாமா?......உம்......பேச்சு மட்டும் ஒரு கூடைப் பேச்சுப் பேசுகிறாயே! (ஒரு மலரைக் கிள்ளி அவள் மீது வீசுகிறான்)*

**லீலா :** *(புன் முறுவலோடு) ஆமாம், கொஞ்ச வந்து விட்டீர்கள். நான்படும் கஷ்டம் உங்களுக்கென்ன தெரிகிறது? இதோ பாருங்கள்! இனிமேல் இப்படியெல்லாம் செய்தால் என்னை நீங்கள் பார்க்கவே முடியாது.*

**பாலு :** ஏன் வீட்டைவிட்டு வெளியில் வரவே மாட்டாயோ?

**லீலா :** ஆமாம், உங்களுக்கு எப்பொழுதும் இந்த விளையாட்டுப் பேச்சுத்தான். என் மனோவேதனை உங்களுக்கென்ன தெரிகிறது?

**பாலு :** லீலா! ஒரு விஷயமல்லவா, அதைச் சொல்ல மறந்து விட்டேனே.

**லீலா :** என்ன?

**பாலு :** இன்று மாலை காந்தி மைதானத்தில் பிரமாதக் கூட்டம். உன் அண்ணாவின் பிரசங்கம் ரொம்பப் பிரமாதம். அதனால்தான் நான் வரக்கூடத் தாமதம்.

**லீலா :** அப்படியா? இன்னிக்குக் கூட்டத்தில் அண்ணாவும் பேசினாரா? அவர் பேசுவதாக என்னிடம் சொல்லவில்லையே? ஐயோ பாவம், காலையில் போனவர் இன்று பகல் உணவுக்குக்கூட வரவில்லை.

**பாலு :** சாப்பாட்டுக்குக்கூட வரவில்லையா, ஏன்?

**லீலா :** ஆமாம், புண்ணில் கோலிடுவதுபோல, சதா ஒரு மனிதனை இடித்து இடித்து ஏதாவது சொல்லிக் கொண்டே இருந்தால் எப்படி நிம்மதியாய் இருக்க முடியும்?

**பாலு :** நீ சொல்வதொன்றும் எனக்கு விளங்கவில்லையே?

**லீலா :** வறுமையும் வயதும் அதிகம் ஆக ஆக, என் அம்மாவின் புத்தியும் பொறுமையும் குறைந்து கொண்டே வருகிறது போலிருக்கிறது. அவரைக் காணும் போதெல்லாம் "வேலை வெட்டியில்லாமல் ஊர் சுற்றுகிறாய்; கொஞ்சங்கூடக் கவலையில்லை; அந்தக் கடன் கட்டவில்லை, இந்தக் கடன் கொடுக்கவில்லை" என்று சிடுசிடென்று பேசிக்கொண்டே இருக்கிறார்கள்..

நான் வீட்டில் இருப்பது வேறு அவர்களுக்குப் பெரிய பாரமாய் இருக்கிறதாம். அம்மா பேச ஆரம்பித்தால் உடலே குன்றிவிடுகிறது. பாவம் அவர் என்ன செய்வார்? வேலைக்காக அலையாத இடமே இல்லை.

**பாலு :** அடடா! பாவம் உலகமே இப்படித்தான். நல்லவர்களுக்கும் திறமைசாலிகளுக்கும், இவ்வுலகத்தில் மதிப்பே யில்லை. அவர்கள் உழைத்தாலும் தகுந்த ஊதியம் கிடைப்பதும் இல்லை. அடாடாடா! இன்றையக் கூட்டத்தில் அவர் பேசி யிருக்கிறார் பாரு அதைப்பற்றி என்ன அபிப்பிராயம் சொல்வதென்றே எனக்கு விளங்கவில்லை......

**லீலா :** (ஆவலோடு) தாங்கள் முழுமையும் கேட்டீர்களா? அடாடா! நான் கேட்க முடியாமல் போய்விட்டதே! எதைப் பற்றிப் பேசினார்? என்னென்ன பேசினார்?

**பாலு :** பால்ய விவாகத்தின் தீமைகளைப் பற்றியும் காதல் மணம் மறுமணம் இவற்றின் அவசியத்தைப் பற்றியும் அழகாகப் பேசினார். இன்னும் மொழிப் பற்று, நாட்டுப் பற்று, அடிமை வாழ்வின் கேவல நிலை, சுதந்திரம் அடைய வேண்டியதன் அவசியம், பெண்கள் முன்னேற்றம், விபசாரத்தின் இழிவுத் தன்மை, தற்காலக் கல்வி முறையின் சீர்கேடு, கைத் தொழில், கிராம முன்னேற்றம் அடாடாடா! இனி மேல் சொல்லவேண்டியது என்பதாக ஒன்றும் பாக்கி யில்லை. அப்பப்பா! என்ன கம்பீரமான பேச்சு, உயர்ந்த உவமானங்கள்; ஆணித்தரமான எடுத்துக் காட்டுகள்! ஒவ்வொரு வார்த்தைக்கும் சபையில் கர கோஷமும் ஆரவாரமும்தான். உன் அண்ணாவும் இவ்வளவு உயர்வாகப் பேசுவாரென்று நான் எதிர் பார்த்ததே இல்லை. எனக்கே ஆச்சரியமாகப் போய் விட்டது, போயேன்!

லீலா: இதுதானு பிரமாதம்! இன்னும் அவர் எழுதிக் கத்தை கத்தையாய்க் குவித்திருக்கும் கட்டுரைகளையும், கதைகளையும், கவிதைகளையும் பார்த்தால் நீங்கள் அப்படியே பிரமித்து விடமாட்டீர்களா!

பாலு: ஏன்! அதையெல்லாம் திரட்டி ஒரு புத்தகமாக வெளியிட்டாலென்ன?

லீலா: அதற்கும் காலம் வரவேண்டாமா? இந்த உலகத்தில் நல்ல சரக்குகளுக்கு மதிப்பில்லை என்று இப்பொழுதுதானே சொன்னீர்கள்.

பாலு: ஆமாம்; அதுவும் சரிதான்.

லீலா: மேலும், "வித்தைக்குச் சத்துரு விசனமும் தரித்திரமும்" என்பதுபோல் ஓயாக் கவலையும் பொழுது விடிந்து பொழுது போனுல் சதா இடிச் சொல்லுமாக இருந்தால் அவர்தான் என்ன செய்ய முடியும் முதலில் இதைப் பாருங்களேன்! அவர் பிரசங்கத்திற்குப் போவதே எங்கம்மாவுக்குப் பிடிக்கவில்லையாம்! பிரசங்கம் செய்வது கேவலமாம்.

பாலு: ஆகா! ரொம்ப நன்ருயிருக்கிறது......கர்ளுடகங்களுக்கு இதைப்பற்றி என்ன தெரியும்? அதெல்லாம் இருக்கட்டும். நமது காதலைப்பற்றி......உன் அண்ணுவுக்கு ஏதாவது தெரியுமா?...

[இதுசமயம் தற்செயலாக அந்தப் பக்கம் வந்த நடராஜன் இவர்களைக் கண்டு திகைத்து மறைந்து நின்று கவனிக்கிருன்]

லீலா: (நாணத்துடன்) ஆமாம் உங்களுக்கு இதுதான் வேலை.

பாலு: வந்துவிட்டதா இந்தப் பாழாய்ப்போன வெட்கம்?

லீலா: இதெல்லாம் என்ன கேள்வி?

பாலு : ஏன்? இது அவசியமான கேள்வி இல்லையா என்ன? காதல் மணத்தின் அவசியத்தைப் பற்றி மேடையில் நின்று பிரமாதமாய்க் கர்ஜிக்கும் வீர ராயிற்றே. ஒருக்கால், நம் விஷயம் அவர் காதுக்கு எட்டினால் நமது காதலுக்கும் ஒரு விமோசனம் உண்டாகுமே என்றுதான் நினைத்தேன்.

லீலா : (புன்முறுவலோடு முகத்தைச் சொடுக்கிவிட்டு) தெரிந்தால், விமோசனம்தான். என் அண்ணா என்ன உங்களைப்போல் பிறர் சொல்லுக்கு அஞ்சும் கோழையென்று நினைத்தீர்கள்?

பாலு: ஆஹா ஹா! சொல்ல வேண்டுமா என்ன! சூரப் புலிதான்! இப்படிச் சொந்த விஷயத்தில் நிறைந்த ஊழலை வைத்துக்கொண்டு உலகத்திற்கு ஞானோபதேசம் செய்யும் மேடைப் பிரசங்கிகளையும் தலைவர்களையும் எத்தனையோ பேர்களை நான் பார்த்திருக்கிறேன்.

லீலா : இதோ பாருங்கள்! என் அண்ணாவைப்பற்றி உங்களுக்கு ஒன்றும் தெரியாது. தெரிந்துகொள்ளவும் முடியாது. இனிமேல் எனக்கு முன்னால் அவரைப்பற்றி இப்படியெல்லாம் பேசாதீர்கள்.

(முகம் கடுத்துத் திரும்புகிறான்)

பாலு : அடடே! மைத்துனராயிற்றே என்று விளையாட்டாய்ப் பேசினால், அதற்குள் நீ பிரமாதமாகக் கோபித்துக் கொள்ளுகிறாயே வேண்டுமானால் நீயும் என்னுடன் வா, உன் முன்னாலேயே நான் அவரை இன்னும் கேலி செய்கிறேன்; அவர் என்னை என்ன செய்கிறார் என்று பார்ப்போம். என்ன? இப்போதே வருகிறாயா?

**லீலா :** வேண்டாம் வேண்டாம்! உங்கள் தைரியம் எனக்குத் தெரியாதா என்ன? எதிரி இல்லாத இடத்தில் நீங்கள்...

**பாலு :** இருந்தால்தான் என்ன? நான் செய்த குற்றத்திற்குத் தண்டனையாக உன்னை நான் கல்யாணம் செய்துகொண்டுதான் ஆகவேண்டும் என்று வற்புறுத்துவார்; அவ்வளவுதானே. குற்றத்திற்குத் தண்டனையாகவும் அவர் சொல்லுக்காகவும் எதிர் பார்த்த உன்னை ஏற்றுக்கொள்வதுதானு எனக்குக் கஷ்டம்?

**லீலா :** ஆஹா ஹா! எவ்வளவு பெரிய தண்டனை! சாமர்த்தியத்தைப் பாருங்கள்!...சரி, அதிருக்கட்டும்; உங்கள் வாதி ஐம்பு இப்பொழுது என்ன செய்து கொண்டிருக்கிருன்?

**பாலு :** என் வாதியா! நம் இருவருக்கும் வாதி யென்று சொல்லு. மூன்ருவது முறையாக ஆருவது பாரத்திலே இந்த வருஷமும் கோட் அடித்துவிட்டானென்று நான் முன்பே சொல்லவில்லையா? பிறகு இப்படியே பலரோடு சேர்ந்து ஊர் சுற்றிக்கொண்டிருந்தான். இப்பொழுது உங்கள் மாமா இருக்கிருரே திவான் பகதூர், அவருக்கு இவன் தான் அந்தரங்கக் காரியதரிசியாம்; கேட்கவேண்டுமா? இனிமேல் அவன்தான் திவான்பகதூர்.

**லீலா :** ஓஹோ! அதுதான் நிமிஷத்திற்கு ஒரு அலங்காரம் செய்துகொண்டு வீதியில் ஒரு நாளைக்கு நூறுதரம் ராஜ நடை நடக்கிருன் போலிருக்கிறது.

**பாலு :** என்ன! உங்கள் வீதிப்பக்கமா? உன்னிடம் எவ்வளவு அவமானப்பட்டாலும் அவனுக்குக் கொஞ்சங்கூட வெட்கமே இல்லையே!......

**லீலா:** என்னமோ நாய் முழுத் தேங்காய்க்கு ஆசைப்பட்ட கதையைப் போலத்தான்.

**பாலு:** ஏன் லீலா! நாம் இருவரும் இன்னும் எத்தனை நாளைக்குத்தான் இப்படியே இருப்பது? அப்பா அம்மா இருவரும் சில நாளாக மெள்ளக் கலியாணப் பிரச்னையை ஆரம்பம் செய்கிறார்கள். எனக்கோ வாய்விட்டு அவர்களிடம் சொல்ல யோசனையா யிருக்கிறது.

**லீலா:** (நீண்ட பெருமூச்சுடன்) யோசனையின் முடிவு இரண்டில் ஒன்றுதானே?

**பாலு:** லீலா! என்ன சொல்லுகிறாய்?

**லீலா:** ஒன்றுமில்லை ஒன்று வாழ்வு. இல்லையேல் சாவு இது தானே...என் முடிவு...அதுதான் உங்கள் முடிவில் இருக்கிறது என்றேன். நான் வேறென்ன சொல்வேன்?

**பாலு:** (பதட்டத்துடன்) இல்லை, இல்லை. லீலா! நீ அப்படி ஒன்றும் தவறாக நினைத்துவிடாதே. அதற்காகத் தானே அவர்கள் வார்த்தைக்குப் பிடிகொடுக்காமலே நாளைக் கடத்திக் கொண்டு வருகிறேன். லீலா அதோ பார்த்தாயா! இப்பொழுதுதான் வானத்தில் பூரணச் சந்திரன் உதயமாகிறான். ஆஹா!

(பாலு - லீலா - பாட்டு)

பாலு : ஒளி நிலவின் எழில் பாராய்!

லீலா : உமையே நிகராமோ! (ஒ)

பாலு : களிநடமிடு மயில் போலே!

லீலா : காதலரே நாமே!

பாலு : பூதல மேல் மகிழ்வோம்! (ஒ)

லீலா : இனிதாகும் மலராவேன்!

பாலு : மலர் மேவும் வண்டாவேன்!

லீலா : உள்ளமெலாம் இன்பமெனும்
தெள்ளமுதத் தேன் பாய!

பாலு : கள்ளமிலாக் காதல் (3)
உனை நான் மறவேனே!

லீலா : உயிர் நீர் உடல் நானே!

பாலு : உயிர் மாமட மானே!

இருவரும் : நிலவும் கலையும் போல்
மலரும் மணமும் போல்
உலகினில் வாழ்வோமே......

லீலா : (நகர சபை மணி 7 அடிக்கும் சப்தம் கேட்டுத் திடுக்கிட்டு) அடடே மணி ஏழாகிவிட்டதே! சரி, அம்மா தேடுவார்கள், அண்ணாவும் இந்நேரம் வீட்டுக்கு வந்திருப்பார்; நான்......போய்வரட்டுமா?

பாலு : லீலா அதற்குள்ளாகவா? இன்னும் சற்று நேரம்...

லீலா : இல்லை, இல்லை. அதிக நேரம் ஆகிவிட்டது. நாளை மாலை சந்திக்கலாம். நான் வரட்டுமா?

பாலு . நாளை மாலை 5½-மணிக்கு. மறந்துவிட மாட்டாயே?

லீலா : மறக்கமாட்டேன், நான் வருகிறேன்.

(லீலா புன்முறுவலோடு மறைகிறாள். அவள் சென்ற திக்கை நோக்கிக் கொண்டிருந்து விட்டு சிறிது நேரத்தில் பாலுவும் செல்லுகிறான். மறைந் திருந்த நடராஜன் வெளியே வந்து அவர்கள் இரு வரையும் பார்த்துப் பெருமூச்சுடன் புன்முறுவல் பூக்கிறான்)

## காட்சி ௫.

---

இடம்: நடராஜன் வீடு காலம்: காலை.

பாத்திரங்கள் :

லீலா-காமாட்சி-நடராஜன்-திவான்பகதூர்.

[லீலா பின்னல் வேலை செய்துகொண்டே ஒரு கயிற்றுக் கட்டிலில் உட்கார்ந்து பாடிக் கொண்டிருக்கிருள். காமாட்சி வருகிருள்.]

**காமா:** ஏண்டி! ஓங்க அண்ணென் வச்ச வரிசைக்கு உனக்குப் பாட்டுவேறையா வருது, பாட்டு. முகரையைப் பாரு சீ! கழுதை! போய் வேலையைப் பாருடி. அவன்தான் கெட்டுத் தொலைஞ்சுப் போனுன்னு இருந்தா நீ வேறையா பாட்டையும் கதையையும் படிக்க ஆரம்பிச்சுட்டே; ரொம்ப நல்லாருக்கு! இது என்ன தேவடியா வீடா? ஒரு வயசுப் பொண்ணு லெக்ஷணமாப் பசுமாதிரி அடுத்த வீட்டுக்குத் தெரியாமே இருப்பியா, கொஞ்சங்கூட அடக்கமில்லாமே இப்படி பொழுதனைக்கும் கூத்தடிக்கிறீயே இது ஒனக்குத் தேவலாமா? இல்லே ஒனக்குத் தேவலாமான்னு கேட்கிறேன்

**லீலா:** இதென்னம்மா நீ பேசுறது வேடிக்கையாய் இருக்கு. சங்கீதம் பழகிக் கொள்வதால் எங்காவது கெட்டுப் போவார்களா? பெரிய மனிதர்கள் வீட்டிலெல்லாம் ஆயிரம் ரெண்டாயிரமென்று செலவழித்துப் பாட்டுச் சொல்லிக் கொடுக்கிருர்களே; அவர்களெல்லாம் தங்கள் குழந்தையைக் கெடுத்துவிடுவதற்கா அப்படிச் செய்கிருர்கள்?

**காமா :** அது என்னமோ, இந்த சினிமாவையும் ட்ராமா வையும் பார்த்துட்டு எடுத்ததுக்கெல்லாம் எதுத்து எதுத்துப் பேசுற இந்தக் காலத்துக் குட்டிகளோட பேச யாராலே முடியும்.

(வாசலில் ஹாரன் சப்தம் கேட்க இருவரும் திரும்பிப் பார்க்கிறார்கள். பொன்னம்பலம் பிள்ளை கனைத்துக்கொண்டே ஆடம்பரத் துடன் வருகிறார். ட்ரைவர் பழக்கூடை களையும் மற்றும் பல தின்பண்டங்களையும் கொண்டு வந்து வைக்கிறான். காமாக்ஷி பர பரப்போடும் மலர்ந்த முகத்தோடும் பேச ஆரம்பிக்கிறாள்)

**காமா :** வாங்கண்ணா! வாங்க வாங்க, இப்படி உட் காருங்கள்.

**பொன் :** என்ன காமு! எல்லோரும் சௌக்கியந்தானே?

**காமா :** என்னமோ ஒங்க புண்ணியத்திலே இருக்கிறோம். செத்தோமா பொளச்சோமான்னு பாக்க இப்பவா வது ஒங்களுக்கு மனசு வந்திச்சே.

**பொன் :** அடடே! அப்படியெல்லாம் ஒன்றுமில்லை...... அன்றைக்கு அவன் பேசியதை நினைத்தால் (நீண்ட பெருமூச்சு விட்டு) ஊம் - என்னமோ. பேசிவிட்டுப் போகிறான், சிறுபிள்ளைத்தனம்; அதுகூடப் பிர மாதம் இல்லை. அடிக்கடி உங்களை வந்து பார்க்க வேணும் என்ற ஆசைதான். எனக்கு எங்கே ஒழி கிறது. ஊரில் ஒரு பெரியமனிதன் என்று இருந் தால், அப்பாடா எவ்வளவு தொந்திரவு தெரியுமா? அங்கே டீபார்ட்டி, இங்கே மீட்டிங், அங்கே அது இங்கே இது என்று ஏதாவது வேலை வந்துவிடுகிறது. ஊருக்கு ஒரு கலெக்டரோ கவர்னரோ வந்தால் முதலில் நாம் இருக்கவேண்டியதாய் இருக்கிறது. பெரிய மனிதர் வீடுகளில் ஏதாவது விசேஷமென்றால்

திவான்பகதூர் பொன்னம்பலம் பிள்ளைக்குத்தான் முதல் அழைப்பு. இதோடு தொலைகிறதா? நிலபுல விஷயமாக இந்தப் பண்ணைக்காரப் பயல்களோடு வேறே மாரடிக்க வேண்டியதாயிருக்கிறது. இவ்வளவு இடைஞ்சல்களுக்கு இடையிலே உங்களை வந்து பார்க்க எனக்கு எங்கே நேரம் கிடைக்கிறது?

**காமா :** சரி சரி. நேரமாச்சு, லீலா! நீ போய் சமயலுக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய். முதலில் வெந்நீர் போடு.

(லீலா போகிருள்)

**பொன் :** ஏன் காமு! லீலாவை ஏன் இப்படி ஒரு மூக்குப் பொட்டுக் கூட இல்லாமல் வைத்திருக்கிருய்? ஒரு வயதுப் பெண்ணை இப்படி வைத்திருக்கலாமா?

**காமா** நான் என்ன அண்ணு பண்ணுவேன்! அவளையும் ஒரு காலத்தில் உச்சி முதல் உள்ளங்கால் வரைக்கும் தங்கத்தாலேயே எழைச்சுத்தான் வச்சிருந்தேன். அப்போ அவள் ஒரு லக்ஷாதிபதியின் மகளாயிருந்தாள். (துக்கம் தொண்டையை அடைக்கத் துணியால் கண்ணைத் துடைத்துக்கொள்ளுகிருள்) அந்தப் பாவி மனுஷன், இப்படி இதுகளை யெல்லாம் என் தலையிலே கட்டிட்டு இவ்வளவு சீக்கிரமாப் போயிடுவாருன்னு நெனைச்சேன்?

**பொன் :** ஊம். என்ன செய்யலாம்! நானும்தான் ஆதியிலேயே இந்தக் கப்பல் வியாபாரம் வேண்டாம் வேண்டாமென்று அந்த மனிதருக்கு எவ்வளவோ சொன்னேன். கேட்டாரா! என்னமோ. அந்தக் கப்பலும் கவிழவேண்டும்; அதே கவலையால் அவரும் சாகவேணும்; உங்கள் குடும்பமும் இப்படி ஆக வேண்டும் என்று இருக்கே; இனிமேல் இதற்காக அழுது என்ன பண்ண முடியும்?

**காமா :** இருந்தாலும் நீங்களும் இப்படிக் கவனிக்காம இருக்கப்படாது. கெட்டுப்போயிட்டோம். இன்னமே நம்ம தனியா இந்தப் பட்டணக்கரையிலே இருக்க வேண்டாம். நீங்க இருக்கிங்கோ; ஆயிரமா இருந்தாலும் கூடப் பொறந்த பொறப்பு; நம்மளெ விட்டுடமாட்டிங்க இன்னு நெனேச்சுத்தானே அறுத்த கழுத்துத் தழும்புகூட மாருமே இந்த சின்னஞ் சிறுசுகளையும் கையிலே புடிச்சிக்கிட்டு வந்தேன். (மறுபடியும் கண்ணைக் கசக்கிக்கொள்ளுகிருள்)..........ஊம். ஒங்களெச் சொல்லி என்ன? எல்லாம் என் தலைவிதி.

**பொன் :** என்னை நம்பி வந்ததற்கு இப்பொழுது என்ன மோசம் வந்துவிட்டது? உன் மகன் ஒழுங்காய் நடந்து கொண்டிருந்தால் எல்லாம்தான் நடந்திருக்கும்.

**காமா :** அவன் என்னண்ணு! நேற்றுப் பிறந்த சிறுபிள்ளை தானே? அவன் ஒரு எதிரின்னு சொல்லிட்டு நீங்க எங்களெ இப்படி அடியோட மறக்கலாமா?

**பொன் :** ஏன் அவன் எங்கேயாவது ஒரு வேலையைப் பார்த்து இருந்தால் என்ன?

**காமா :** அவனுந்தான் எங்கெங்கேயோ அலைஞ்சுபாத்தான் ; வேலை ஒன்னும் கிடைக்கல்லே.

**பொன் :** சரி, இனிமேல் ஒன்றுக்கும் கவலைப்படவேண்டாம். உங்களை இன்றைக்கு இந்த நிலையிலே பார்க்க எனக்கு அதிக வருத்தமாயிருக்கிறது. கூடப்பிறந்த பாசம் விடுகிறதா? இதோ பார் காமு! இனிமேல் உங்களுக்கு வேண்டிய சௌகர்யமெல்லாம் நானே செய்கிறேன். இந்த வீடு ஈடு இருப்பதாகக் கூட யாரோ சொன்னதாக ஞாபகம். அந்தக் கடனையெல்லாம் கூட நானே கட்டிவிடுகிறேன். வேண்டுமானல் உங்களுக்காக ஒரு பத்தாயிரம் ரூபாய் பேங்கிலே

போட்டு வைக்கிறேன். அந்தக் கீழக்குறிச்சியில் உள்ள நிலமெல்லாம் உன் பேருக்கே சாசனமாக எழுதிவைத்து விடுகிறேன்; போதுமா?

**காமா :** (அளவற்ற மகிழ்ச்சியோடு) என்ன! நிஜமாகவா? நிஜமாகவா? இவ்வளவும் எங்களுக்கு............!

**பொன் :** பின்பு என்ன, விளையாட்டுக்குச் சொல்வதாகவா நினைக்கிறாய்? உண்மையாகவேதான். எனக்கு வேறு யாரிருக்கிறார்கள்? எனக்குப் பிறகு என் சொத்தை யெல்லாம் லீலாவும் அவளுக்குப் பிறக்கும் குழந்தை களும் தானே அனுபவிக்க வேண்டும்!......

(அசட்டுச் சிரிப்பு)

**காமா :** அப்படியானால் நீங்க சொல்றதுக்கு...... அர்த்தம்.........?

**பொன் :** அர்த்தமென்ன அர்த்தம். லீலாவை நான்தான் கலியாணம் செய்துகொள்ளப் போகிறேன். ஏன்? என்ன யோசனை செய்கிறாய்? நாலாந் தாரமாச்சே யென்றா? இல்லை வயதாகிவிட்டதா? உன்னைவிட இரண்டு மூன்று வருஷத்துக்கு மூத்தவன்தானே? அதிலும் இப்போது உன்னைப் பார்த்தால் அக்கா என்றும், என்னைப் பார்த்தால் தம்பி என்றும்தானே சொல்லுவார்கள்?

**காமா :** அதுக்கு இல்லை அண்ணா! இதுக்கு நடராஜனும் லீலாவும் சம்மதிக்கணுமேன்னு தான்.

**பொன் :** அவர்கள் சம்மதத்தை என்ன காமு கேட்பது?... திவான்பகதூர் பொன்னம்பலம் பிள்ளைக்குப் பெண் கொடுக்கவா யோசனை? நான் நினைத்தால் எத்தனையோ பேர் பெண் கொடுக்க நான் நீ யென்று ஓடி வருவார்கள். இருந்தாலும் உன்னைவிட அவர்க

ளெல்லாம் எனக்குப் பெரிதா? என்னமோ தங்கை மகளாச்சே, சொந்தம் விட்டுப் போகக் கூடாதே; இந்தச் சொத்தெல்லாம் அனியாயமாகப் பிறத்தியானுக்குப் போய்விடக் கூடாதே என்று தான் பார்க்கிறேன்.

(நடராஜன் வருகிறுன். பார்த்தும் பாராதவன்போல், போய்ச் சட்டையைக் கழற்றி மாட்டிக் கொண்டிருக்கிறுன்.)

**காமா :** ஏண்டா தம்பி. இங்கே வந்திருக்கிறது யாருன்னு பாத்தியா?

**நடராஜன் :** யாரது?

**காமா :** மாமா வந்திருக்காருடா! இங்கே வந்து பாரு!

**நட :** யார்? மாமாவா! வாங்க வாங்க. ஏது இந்த ஏழைகள் மேலே இவ்வளவு தயவு வந்தது!

**பொன் :** அப்படியெல்லாம் ஒன்றுமில்லே. நீங்கள் தான் என்னமோ நினைத்துக் கொண்டு ஒரு மாதிரியாக இருக்கிறீர்கள். நான் வீட்டை விட்டு ஒரு நாளைக்கு வெளியே புறப்பட வேண்டுமாலுல் சாமான்யமாக இருக்கிறதா, என்ன?

**காமா :** அதெல்லாமிருக்கட்டும். இப்போது மாமா எதுக்காக வந்திருக்கார் தெரியுமோ!

**நட :** தெரியாமலென்ன? உன்னைப் பார்க்க வந்திருப்பார்.

**காமா :** உனக்கு ஒரு வேலே பார்த்துத் தர்ராரும்.

**நட :** அதுதான் சொன்னேன். இப்போதுதான் தயவு பிறந்திருக்கிறதென்று.

**காமா :** அதோடு மட்டுமா, நம்ம வீட்டுக் கடனை யெல்லாம் தீர்த்துடறேன்னுட்டாரு!

**நட:** ரொம்ப சரி, அப்புறம்?

**காமா:** லீலா பேராலேயே பத்தாயிரம் ரூபாய் பாங்கிலே போடுறாராம்.

**நட:** அடடே ஏது லீலாவின் மேல் அவ்வளவு கருணை?

**காமா:** வேறே ஒன்னுமில்லே. லீலாவை அவரே கலியாணம் செய்துக்கிறேன்னு......

**நட:** அட போம்மா! சும்மா விளையாடுகிறாயே. அவருடைய அந்தஸ்து என்ன! நிலைமை என்ன! அவர் வந்து நம் வீட்டுப் பெண்ணைக் கலியாணம் செய்து கொள்வாரென்றால், இது நடக்கிற காரியமா என்ன?

**பொன்:** பார்த்தாயா! பார்த்தாயா காமு! மாப்பிள்ளை இதற்கு ஒன்றும் தடை சொல்லவே மாட்டார் என்று நான் அப்பொழுதே சொல்லவில்லையா?

**நட:** தடையாவது, பெரிய பிரபு, அதிலும் ஒரு திவான்பகதூர். அப்படியுள்ள தங்களை மைத்துனராக அடைய எந்த மடையனாவது ஆட்சேபிக்க முடியுமா?

**காமா:** கடவுள் கிருபையினாலே அப்படியே முடிஞ்சுட்டா எல்லாப் பெருமையும் ஒனக்குத்தான்.

**நட:** ஆமாம். எல்லாப் பெருமையும் எனக்குத்தான். அடடா! இனிமேல் எனக்கென்ன குறைவு! இந்திர போகமே இங்கேதான்!

**பொன்:** சரி! மாப்பிள்ளை. இனிமேல் வீணாக காலைக் கடத்தக் கூடாது! முகூர்த்தத்திற்கு ஆகவேண்டிய ஏற்பாடுகளைச் சீக்கிரம் செய்யவேண்டியதுதான்.

**நட:** ஆஹா அதிலென்ன தடை...... உம். அது சரி இப்பொழுது யார் யார் வந்திருக்கிறீர்கள். நீங்கள் மட்டும்தானா? அல்லது......!

**பொன் :** ஏன்? கூட வேலைக்காரனும் ட்ரைவரும் வந்திருக்கிறார்கள். ஏன் என்ன செய்ய வேண்டும்?

**நட :** ஒன்றும் செய்ய வேண்டாம். நீங்களெல்லோரும் உடனே இதை விட்டுப் புறப்பட வேண்டும்..

**காமா :** அதுக்குள்ளே என்னடா அவசரம்? இத்தனை நாளைக்கப்புறம் வந்தார்; இன்னும் சாப்பிடக்கூட வில்லை......

**நட :** அடடே அவருக்குச் சாப்பாடு இப்படியெல்லாமா செய்வது? வேறு விதமாக வல்லவா செய்ய வேண்டும். அவர் லட்சாதிப் பிரபு. அவர் வீட்டில் இல்லாத சாப்பாடா என்ன? சரி! நீங்கள் புறப்படுங்கள்.

**காமா :** என்னடா அவசரம்? வந்தவங்களே இப்படி வெரட்றியே!

**நட :** விரட்டுவதற்கு மாமா கழுதையா என்ன?

**பொன் :** (திடுக்கிட்டு) என்ன என்னையா கழுதை என்று...

**நட :** இல்லை, இல்லை, கழுதையில்லை—குதிரை!

**பொன் :** பார்த்தாயா இன்னும் இந்தச் சின்னப் பிள்ளைப் புத்தியும், முரட்டுத்தனமும் உன்னை விட்டுப் போக வில்லையே!

**நட :** ஆமாம், நீ மகாப் பெரிய மனுஷன்தான். தெரியும்-புறப்படு.

**காமா :** தம்பி, மாமா......

**நட :** (கடுங் கோபத்தோடு உரத்த குரலில்) ஆமாம் எல்லாம் எனக்குத் தெரியும். ஆல் ரைட்—திவான் பகதூர், கிளம்பலாம்..

**பொன்:** டேய்! நீ யாரிடம் பேசுகிருய் என்பது தெரி கிறதா?

**நட:** ஆஹா! நன்ருகத் தெரிகிறது. மண்டை வறண்ட ஒரு மடையனிடம் பேசுறேனென்று.

**பொன்:** யார் நானு? என்னையா மடையனென்ருய்?

**நட;** இல்லே! மகா புத்திசாலிதான். இல்லாவிட்டால் கட்டையிலே போகிற காலத்திலே. கன்னியர் கள்மேலே காதலும், கலியாண நினைப்பும் வருமா?

**பொன்:** என்ன; என்னையா கிழவனென்று சொல்லுகிருய்?

**நட:** ஊஹூம்! யார் அப்படிச் சொன்னது? குழந்தை யல்லவா! பல்கூட இனிமேல்தான் முளைக்க வேண்டும்; கல்யாண மாப்பிள்ளை முகரையைப் பாருங்களேன்!

**பொன்:** உன் குணம் உன்னைவிட்டுப் போகுமா?

**நட:** அது எப்படிப் போகும்?

**பொன்:** அடே நான் நன்மைக்குத்தான் சொல்லுகிறேன்; அது.........

**நட:** எது நல்லது எது கெட்டதென்று எனக்குத் தெரியும். உன் பணத்தைக் கண்டு பல்லேக் காட்டு பவன் நானல்ல. நீ லக்ஷாதிபதியாய் இருக்கலாம். ஆனுல் உன் பிச்சைக்காரக் காசுக்காக என் தங்கையை நான் விற்றுவிடத் தயாராயில்லே. இந்த உயிர் இந்த உடலே விட்டு நீங்கும்வரை நீ நினைப்ப தொன்றும் நடக்காது.

**காமா:** அடே! ஏண்டா உனக்கு இந்தத் துர்ப்புத்தி? இந்த நிலைமையிலே நம்மளே வேறே யாருடா வச்சுத் தாங்கப் போரு?

**நட :** மற்றவன் தன்னைத் தாங்குவான் என்று நினைப்பவன் மனிதனாகவே இருக்க முடியாது.

**பொன் :** அடே வேண்டாம், வீணாகக் கெட்டுப்போகாதே. உன்னையும் உன் நிலைமையையும் உணராமல் பேசுகிறாய். அதனால் நீ அதிகக் கஷ்டப்படுவாய்; நான் சொல்வதைக்கேள்.

**நட :** (பொறுமையை இழந்து) நீ சொல்வதை நான் கேட்கத் தயாராயில்லை. நான் சொல்வதை நீ கேள். ஆல்ரைட் திவான் பகதூர்; கெட் அவுட்.

**பொன் :** என்ன திமிர்! ஏழைக் குறும்பு என்பது சரியாய்த்தான் இருக்கிறது......உம்! மயிலே மயிலே என்றால் இறகு போடுமா? இருக்கட்டும், அடே யாருடா அங்கே?

**வேலை ஆள் :** எஜமான்!

**பொன் :** ட்ரைவரைக் கார் எடுக்கச் சொல். (கிளம்புகிறார்).

(வேலையாள் போகிறான்)

**காமா :** என்னண்ணா—அவனுக்காகவா இப்படிக் கோபித்துக் கொள்வது? அவன் சிறு பையன் தானே. அவன் போறான். எனக்காகவாவது நீங்க சாப்பிட்டுட்டுத் தான் போகணும்.

**பொன் :** இந்தப் பிச்சைக்காரப்பயல் வீட்டிலா? (பெருமூச்சு விட்டு) இருக்கட்டும் பார்த்துக்கொள்ளுகிறேன். (டிரைவர் வருகிறான்) என்னப்பா கார் எடுக்கலையா?

**ட்ரைவர் :** எஜமான்! பெட்ரோல் அடைச்சிக்கிட்டு கார் ஸெல்ப் எடுக்க மாட்டேங்குது. தள்ளி ஸ்டாட் எடுக்கறதுக்கு நாலு ஆள் வேணும்.

**நட:** ஆமாமா, மாமாவைப் பாடையிலே வைக்கிறதுக்கு நாலு ஆள் வேண்டியதுதான்.

**[எல்லோரும் சிரிக்கிறார்கள்; திவான்பகதூர் கோபமாகப் பேசுகிறார்.]**

**காமா :** அடே! ஏண்டா உனக்கு இந்தத் துர்ப்புத்தி?

**நட :** போதுமம்மா. போதும் உன் ஞானோபதேசம் எல்லாம் எனக்குத் தெரியும். அவன் பட்டம், பதவி எல்லாம் உனக்குத்தான் பெரிது.........அந்த மடையனின் தங்கைதானே நீ.

**காமா :** ஆமாம், அந்த மடையனில்லாமே வேறே எந்த புத்திசாலிதான் உன் தங்கையை வந்து கட்டிக்கப் போறான்னு பார்ப்போமே! சேச்சே. இனிமை அரை நாழிகூட இந்த வீட்டிலே இருக்க யோக்கியதை இல்லே.

**நட :** ஆமாம், ஆமாம், பெரிய திவான்பகதூரின் தங்கையல்லவா நீ? இந்த ஏழைக் குடிசையிலே இருக்கக் கூடாதுதான். நன்றாக மேள தாளத்தோடு இப்பொழுதே வேண்டுமானாலும் போகலாம்.

**காமா :** இல்லே. அவன் இல்லாமே நீதான் என்னெ வச்சுத் தாங்கப் போறே.

**நட :** இல்லே! இதுவரை அவன்தானே உனக்கு மாதா மாதம் படியளந்துகொண்டு வந்தான். கிழட்டு அயோக்கியப் பயல்! (போகிறான்.)

———

## காட்சி 6.

---

**இடம் :** திவான்பகதூர் மாளிகை **காலம் :** மாலை

**பாத்திரங்கள் :** திவான்பகதூர், முனியாண்டி, ராமசாமி சேர்வை.

**பொன் :** (நடமாடிக்கொண்டே பெருமூச்சு விடுகிறார்) என்ன மமதை! என்ன திமிர்! நிற்க நிழல் இல்லை! குடிக்கக் கூழில்லை! என் கௌரவமென்ன! அந்தஸ்தென்ன! கொஞ்சங்கூட கவனிக்காமல் பேசிவிட்டானே............மடையன். கொள்ளிக்கட்டையை எடுத்துத் தலையைச் சொறிந்துகொள்வதுபோல் அவன் என்னைப் பகைத்துக்கொண்டான். இருக்கட்டும்; கூடிய சீக்கிரம் திவான்பகதூர் பொன்னம்பலம் பிள்ளை யாரென்பதைத் தெரிந்துகொள்ளச் செய்கிறேன். (சோபாவில் சாய்கிறார். தரகன் முனியாண்டிப் பூசாரி "மகமாயி" என்றபடி வருகிறான். குழைந்து ஒரு பக்கம் ஒதுங்கி வணங்குகிறான்.)

**பொன் :** வாய்யா வா! நானும் உன்னைத்தான் எதிர்பார்த்துக்கொண்டு இருந்தேன். சரி, சேர்வையைப் பார்த்தாயா? அவன் என்ன சொன்னான்?

**முனி :** சொல்றதென்னுங்க? இந்த முனியாண்டி போர காரியம் முடியாமே இருக்குமா என்ன? எல்லாம் ஒங்க தயவை எதிர்பார்த்துத் தானே ஆகணும்.

(சேர்வை வருகிறான்)

**சேர்வை :** நமஸ்காரங்க!

**பொன் :** வாய்யா வா! உன் பெயர்தான் ராமசாமி சேர்வையா?

**சேர்வை :** ஆமாங்க.

**பொன் :** சரி அப்படி உட்காரு.

(சேர்வை நிற்கிறான்)

**முனி :** அட சும்மா உட்காரய்யா! எஜமான் அப்படியெல்லாம் ஒன்றும் வித்தியாசமா நினைக்கமாட்டாரு.

(சேர்வை உட்காருகிறான்)

**பொன் :** ஊம்...நீர்தான் என் மைத்துனர் நாராயணசாமி பிள்ளை வீட்டின்பேரில் பணம் கொடுத்திருக்கிறீரோ?

**சேர்வை :** ஆமாங்க.

**பொன் :** எவ்வளவு?

**சேர்வை :** ஆயிரத்தி ஐநூறு ரூபாயிங்க! ஆறு வருஷம் ஆச்சுங்க, ஒன்று வட்டி போட்டுப் பத்திரம் எழுதினது. இப்பக் கிட்டத்தட்ட மூணு ரூபாய்க்கு மேலே ஆவுமுங்க.

**பொன் :** நீ ஏன் அந்தப் பணத்தை இன்னும் வசூல் பண்ணாமல் இருக்கிறாய்?

**சேர்வை :** என்ன பண்றதுங்க நல்லா வாழ்ந்த குடும்பம், நொடிச்சுப்போச்சு. அந்தப் புண்ணியவான் இருந்த காலத்திலே எனக்கு எவ்வளவோ ஒதவி செய்திருக்காருங்க. இப்போ ஊட்டே ஏலத்துக்குக் கொண்டாந்தாத்தான் பணம் வரும்போல இருக்கு, பாவம்! அந்த வீடும் போயிட்டா அவரு சம்சாரம் புள்ளே குட்டிங்க எல்லாம் எங்கே போவுமுன்னுதான் யோசிக்கிறேன்.

**முனி :** அட போய்யா போ. அதெல்லாம் பாத்தா இந்தக் காலத்திலே எப்படியய்யா பிழைக்க முடியும்? இந்தப்

பஞ்சகாலத்திலே இரண்டாயிரம் மூவாயிரம் போகிற தென்றால் சாமானியமா என்ன?

**சேர்வை :** ஆமாங்க! அதுக்கு என்னுங்க பண்றது?

**முனி :** ஐயா சொல்றபடி கேட்டா ஒனக்குப் பணத்துக்குப் பணமும் வரும். ஐயா தயவும் கிடைக்கும். அவுங்கக் குடும்பத்துக்கு உபகாரம் செய்த புண்ணியமும் கிடைக்கும்.

**சேர்வை :** நெஜமாவா? அப்புடீன்னு அதை யேங்க நான் வேண்டாங்குறேன்? எப்படியாச்சும் அவங்களும் நல்லா இருக்கணும். எனக்கும் பணம் கெடைக்கணும்.

**முனி :** அப்படீன்னு நான் சொல்றபடி செய்தா அது சீக்கிரம் முடியும்.

**சேர்வை :** என்னு செய்யச் சொல்றீங்க?

**முனி :** நீ உடனே கோர்ட்டுலே தாவாப் போட்டு எவ்வளவு சீக்கிரம் அந்த வீட்டை ஏலத்துக்குக் கொண்டு வர முடியுமோ அவ்வளவு சீக்கிரம் கொண்டார வேணும்.

**சேர்வை :** ஐயோ பாவம். அவங்க பணத்துக்கு எங்கேங்க போவாங்க?

**பொன் :** அட அந்தக் கவலே உனக்கெதற்கையா? பணம் கொடுக்கத்தான் நான் இருக்கிறேனே.

**சேர்வை :** அப்புடீன்னு இப்பவே குடுத்துடுங்களேன். நான் வேணுமின்னாலும் எதாச்சுந் தள்ளிக்குடுக்கிறேன். எதுக்குங்க வீணு வக்கீலுக்குங் கோர்ட்டுக்கும் செலவழிக்கணும்.

**முனி :** அட அவுங்க அதுக்குத்தானே ஐயா இருக்காங்க.

**பொன் :** சேர்வே! அதிலே விஷயமிருக்கு. நீ முனியாண்டி சொல்கிறபடி செய்

**சேர்வை :** ஆகட்டுங்க, எப்படியும் உங்க தயவு இருந்தா சரி.

**பொன் :** அப்படியானல் இன்றேக்கே வக்கீலைக் கலந்து ஆக வேண்டியதை.........

**சேர்வை :** ஆகட்டுமுங்க; அப்படியே செய்திடுறேன். எஜமானே சொல்லும்போது......—...அப்போ நான் வரட்டுங்களா?

**பொன் :** சரி, சொன்னதெல்லாம் ஞாபகமிருக்கட்டும்.

**சேர்வை :** ஆஹா! அதான் சரின்னு சொல்லிட்டேனே! அப்பறம்......

**முனி :** சரி அப்போ.........நானும்...—உத்திரவு வாங்கிக்கிறேன்.

**பொன் :** உனக்கும் ஞாபகம் இருக்கட்டும்.

**முனி :** ஆகட்டுங்க ஏதாவது சில்லரை இருக்குதுங்களா?

**பொன் :** எல்லாம் பிறகு ஆகட்டும்.

**முனி :** மகமாயி!

(போகிருர்கள்)

---

## காட்சி 7.

---

**இடம் :** வீதி — **காலம் :** மாலை.

**பாத்திரங்கள் :** சேர்வை, முனியாண்டி.

**சேர்வை :** ஏங்க, இது என்னுங்க. ஐயா சொல்றது எனக்குக் கொஞ்சங்கூடப் புரியலியே. வியாச்சியம் போட்டா செலவு தொகை உள்படல்லே கொடுக்கும்படியா வரும்...

**முனி :** அதுலே விஷயமில்லாமையா ஐயா அப்படிச் சொல்றுரு. அவரு தங்கச்சி குடும்பங் கஷ்டப் படுறதேப் பாக்க அவருக்கு ரொம்ப வருத்தமா யிருக்கு. அந்தக் குடும்பத்துக்கு ஏதாவது ஒதவி செய்யலாமுன்னு அவர் தங்கச்சி மகன் இருக்காரே அந்தப் பிள்ளையாண்டான் இவரைக் கொஞ்சங்கூட மதிக்கிறதே இல்லையாம். அவன் கொட்டத்தை அடக்கணும் இன்னுதான் இப்படியெல்லாம் செய்யு ருரு. அதோடே நானும் உன் பணம் அநியாய மாய்ப் போயிடக்கூடாதேன்னுதான் இந்த யோசனை யைச் சொன்னேன். எல்லாம் நம்ம வேலைதான். உனக்கென்ன பணம்தானே?

**சேர்வை :** அப்படியா சங்கதி? இந்தப் பையனுக்குத்தான் ஏன் இவ்வளவு அதிகப்பிரசங்கித்தனம். அவுங்கத் தாயோடே பொறந்த மாமந்தானே! அவருக்குப் பிள்ளையா குட்டியா, அவருக்குப் பின்னுலே இந்த சொத்தெல்லாம் அவங்களுக்குத்தானே சேரும். என்னமோ சமயத்துக்குத் தகுந்தாப்புலே, நொழைஞ்சு குடுத்துக்கிட்டுப் போவாமே, குறும்பப் பாருங்க!

**முனி :** வெறுங் குறும்பா? ஏழைக் குறும்புல்லே, எல்லாம் பட்டாத்தானே தெரியும். அது போகட்டும், நீ இப்பவே வக்கீலையா வீட்டுக்குப் போயி ஆகவேண்டி யதைப் பாரு.

**சேர்வை :** இன்னமே சொல்லணுங்களா. நேரா அங்கே தான் போரேன். சரி நான் வரட்டுங்களா?......

**முனி :** சேர்வே, சில்லரை ஏதாவது இருந்தாக் கொஞ்சம்...

**சேர்வை :** அடடா, நான் கொண்டாரலீங்களே, காப்பி சாப்பிடுறதுக்காக இருபது காசுதான் வச்சிருக்கேன்.

**முனி :** ...இருபது காசுதான் இருக்கா...சரி அதையாவது குடு

(சேர்வை தனியாகப் போய் முடிச்சை அவிழ்க்கிறான்.)

**முனி :** (தனக்குள்) ஏன், அதைத்தான் விடணும். நாலு சிகரெட்டுக்கு ஆச்சு.

**சேர்வை :** (பணத்தைக் கொடுத்துவிட்டு) நான் வர்ரேங்க.

**முனி :** (காசைச் சுண்டி இடையில் சொருகிக்கொண்டே) ஆகா! மகமாயி...

(இருவரும் போகிறார்கள்)

---

## காட்சி 8.

---

**இடம் :** நடராஜன் வீடு **காலம் :** காலை

(நடராஜனும் லீலாவும் இரண்டு நாற்காலி களில் அமர்ந்துள்ளனர். நடராஜன் பாரதி பாடல்களைப் பாடிக்கொண் டிருக்கின்றான், போஸ்டு பியூன் வரு கிறான்.)

**போஸ்ட் :** போஸ்ட்!

**நட :** என்ன?

**போஸ்ட் :** உங்களுக்கு ஒரு ரிஜிஸ்டர் இருக்கிறது.

**நட :** ரிஜஸ்ட்டரா? (லீலா உள்ளே போகிறாள். கையெழுத்தைப் போட்டு ரிஜிஸ்ட்டரை வாங்கிப் படிக்கிறான், போஸ்ட்மேன் போகிறான். காமாட்சி வருகிறாள்.)

**காமா :** என்னடாப்பா அது?

நட: ஒன்றுமில்லே. ராமசாமி சேர்வை பணத்துக்காக நோட்டீஸ் கொடுத்திருக்கிருன். ஒரு வாரத்திற்குள் பூராத் தொகையையும் கட்டாவிட்டால் கேஸ் போட்டு விடுவாளும். அவனுக்கும் பணப் பேய் பிடித்துவிட்டது போலிருக்கிறது,

காமா: அவனும் எத்தனை நாளேக்குத்தான் பொறுத்திருப்பான்? வருசமும் அஞ்சாறுக்கு மேலே ஆச்சு. இந்தான்னு ஒரு அரைக்காசு வட்டி கூடக் கட்டலே. அவன் தான் என்ன செய்வான்? இத்தினி நாளா எனக்காகத் தான் பொறுத்துக்கிட்டு இருந்தான்...

நட: இப்போ ஒங்க அண்ணனுக்காக நோட்டீஸ் விட்டிருக்கான்.

காமா: இதென்னடா நீ இப்படிப் பேசுரே? சேர்வை நோட்டீஸு விட்டான்னு அதுக்கு எங்கண்ணன் என்ன பண்ணுவாரு? அவருப் பேச்சே பேசாட்டிப் போனுத்தான் ஒனக்கு சரிப்பட்டுவராதே. இந்த வீடும் போயிட்டா அப்புறம் தெரியும் சந்தியிலே நிற்கவேண்டியதுதான்.

நட: எத்தனையோ கோடி ஜனங்கள் சந்தியிலே நிற்கும்போது நாமும் நின்று விட்டுப் போகிறோம். இதற்காக ஒரு பெண்ணைப் பாழுங் கிணற்றில் தள்ளி விட்டுவிடுவதா என்ன?

---

## காட்சி 9.

---

இடம் : திவான்பகதூர் மாளிகை காலம் : மாலை

பாத்திரங்கள் : திவான்பகதூர், முனியாண்டி, பிச்சைக்காரப் பையன்.

[திவான்பகதூர் சோபாவில் சாய்ந்தபடி சுருட்டுப் பிடித்துக்கொண்டிருக்கிறார். முனியாண்டி வருகிறான்.]

**முனி :** மகமாயி......

**பொன் :** வாப்பா முனியாண்டி. என்ன, காரியமெல்லாம் எப்படி ஆயிற்று?

**முனி :** வீடு நாளைக்கு ஏலம். இன்னெமே எல்லாம் படிஞ்சுடுங்க.

**பொன் :** படிகிறதாவது...உம். ஏனப்பா! அந்தப் பயலைத் தொலைப்பதற்கு ஏதாவது ஒரு வழி யில்லையா?

**முனி :** இதுதானுங்க பிரமாதம். (சுற்றிப் பார்த்துவிட்டு ரகசியமாக) நம்ம சக்கரைத் தேவனைப் புடிச்சா, நிமிஷத்திலே முடிச்சுடுறான்.

**பொன் :** (பயத்துடன்) என்ன, கொலையா? ஊஹூம். அப்புறம் அதனால் நமக்கு ஏதாவது தொந்தரவு வந்துவிட்டால்......சேச்சே அதெல்லாம் வேண்டாம். அவனைத் தந்திரமாகக் கொஞ்ச நாளைக்கு இந்த ஊரை விட்டுக் கிளப்பி விட்டுவிட்டால் நம் காரியத்தை முடித்துக்கொள்ளலாம். எப்படியும் கயிற்றைக் கழுத்திலே போட்டுவிட்டால் அப்புறம் இந்தக் கழுதை வந்து என்ன செய்ய முடியும்?

**முனி :** நீங்க சொல்றதும் நல்ல யோசனைதான் (சற்று யோசித்து) சரி அதுக்கும் வழியிருக்கு. (காதண்டை ஏதோ சொல்லிவிட்டு) எல்லாம் நுழைந்து வேலை செய்யணும்.

**பொன் :** சபாஷ் முனியாண்டி.........ஆனால் இது நடக்க வேணுமே!

**முனி :** நீங்க பாருங்களேன். இந்த முனியாண்டி வேலையை அப்புறம் தெரியும்.

**பொன் :** சரி, எனக்குக் கொஞ்சம் வேலையிருக்கிறது. நீ பிறகு.........

**முனி :** சரி...(இழுப்போடு தலையைச் சொரிந்து கொண்டே) சில்லரை ஏதாவது......

**பொன் :** இந்தா, இந்தப் பத்து ரூபாயை வைத்துக்கொள்; போதுமா?

**முனி :** போதுங்க, இன்னைக்கு மட்டுந்தானே. (போகிறான்) (பிச்சைக்காரப் பையன் ஒருவன் பாடிக்கொண்டு வருகிறான்)

**பிச்சை :** ஐயா பசி காதை அடைக்கிறது. ஒரு காலணா இருந்தால் கொடுங்களேன். உங்களுக்குப் புண்ணியம்.

**பொன் :** சீ! அயோக்கிய ராஸ்கல். போடா வெளியே. எருமை மாதிரி இருக்கிறயே. எங்கேயாவது போய் வேலை செய்தால்? சோம்பேறி நாயே!

**பிச்சை :** வேலை எங்கும் கிடைக்கலே. பசிக்கிறது; ஒங்களுக்குப் புண்ணியம்,

**பொன் :** அடப் பிச்சைக்கார நாயே! நான் போடாங்கிறேன் அவ்வளவு திமிரா! (சவுக்கால் அடிக்கிறார். பையன் கீழே விழுகிறான்.)

———

## காட்சி 10.

---

**இடம் :** நடராஜன் வீடு. **காலம் :** பகல்

**பாத்திரங்கள் :** நடராஜன், காமாட்சி, முனியாண்டி.

[நடராஜன் காமாட்சி இருவரும் வெளித் திண்ணையில் உட்கார்ந்திருக்கிறார்கள்; முனியாண்டி பேசிக் கோண்டே வருகிறான்.]

**முனி :** என்ன அநியாயம்! என்ன அக்ரமம்! உம், யாரையும் சொல்கிறத்துக்கில்லே, ஊரு அப்படிக் கெட்டுப் போச்சி. என்னமா வாழ்ந்த குடும்பம்! எத்தினி கப்பல் ஓடிச்சி! எல்லாம் போராத காலம். அந்த அய்யா இருந்த காலத்திலே, இந்த சேர்வைக்கு எவ்வளவு உபகாரம் செய்திருப்பாரு; எவ்வளவு பணங் குடுத்திருப்பாரு. அதையெல்லாம் நெனைச்சுப் பாக்காமே, அந்தப் படுபாவி திடீருன்னு இப்படி வீட்டே ஏலத்துக்குக் கொண்டாந்துட்டானே; அவன் உருப்புடுவானா?

**காமா:** அதை யெல்லாம் சொல்லி இப்ப என்ன பிரயோசனம்? விடிஞ்சா அமீனா போடு போடுன்னு வந்து வீட்டே ஏலம் போடப் போறான். ஏம்பா முனியாண்டி! இதுக்கு நீயாவது ஏதாவது ஒருவழி செய்யப்படாது? புள்ளேதான் எனக்கு அணிப் புள்ளையாப் பொறந்திருக்கு. இது லே சொல்லப் போனா...வீராப்பு வேறே; இந்தச் சமயத்திலே எங்க அண்ணனேப் பகைச்சுக்காமே இருந்தாலும் (முகத்தில் முந்தானையை வைத்து அழுகிறாள்.)

நட : அவனும் ஒன்றும் சும்மா கொடுத்துவிட மாட்டான். இந்தப் பிரமாத வீட்டுக்காக ஒரு பெண்ணுடைய வாழ்க்கையைக் கெடுத்து விடுவதா என்ன? இந்த வீடு போனாலும் சரி! அத்துடன் நீயும் போய் விட்டாலும் சரி; அதற்காக நான் கவலைப் படப் போவதில்லை.

முனி : தம்பி! நீங்க என்ன இப்படிக் கோவிச்சிக்கிறீங்க? என்னமோ அவுங்க வயித்தெரிச்சல் தோணினதைச் சொல்றுங்க; எல்லாம் போயி இந்த வீடு ஒன்னு தானே!

நட: ஓய்! உன்னை ஒன்றும் கேட்கவில்லை. இது எங்கள் குடும்ப விஷயம், நீ உன் வேலையைப் பார்த்துக்கொண்டு போ.

முனி : பாத்தியா! பாத்தியா! கொஞ்சங்கூடப் பொறுமையில்லையே! நீ உன் மேலேயே குத்தத்தே வச்சிக்கிட்டு இப்படி சொல்றவங்க கிட்டே எல்லாங் கோவிச்சிக்கலாமா?

நட: என்மேலே என்னைய்யா குற்றம்? குற்றமாம் குற்றம்!

முனி : ஆமாம், நீ ஒரு வேலை வெட்டியைப் பார்த்துக்கிட்டு இருந்தா இந்தக் கடங்காரப்பய, கிட்டே வருவானு?

நட: வேலை கிடைத்தால் நான் வேண்டாமென்று சொல்லுகிறேன்? அப்படி நான் சோம்பேறியாக இருக்க விரும்பவில்லையே!

முனி : என்னமோப்பா நீ சரீன்னு எனக்குத் தெரிஞ்ச யாருக்கிட்டேயாச்சும் சொல்லிக்கூட ஏதாவது ஏற்பாடு செய்யலாம். ஆனு அந்த வேலை யெல்லாமா உனக்குப் பிடிக்கும்.

**நட:** அப்படி யெல்லாம் ஒன்றுமில்லே. என் குடும்ப நலத் துக்காக நியாயமான எந்த வேலேயும் செய்யத் தயார்.

**முனி :** எனக்குத் தெரிஞ்ச செட்டியார் ஒத்தர் நேத்துக் கூட ஏங்கிட்டே அவரு கடைக்கு ஒரு கணக்கப் பிள்ளே வேணும் இன்னு சொன்ஞரு. அடுத்தவாரம் கப்பல்லே தான் ரெங்கோனுக்குப் போறேன்னு சொன்ஞரு. ஒரு தரம் போயிட்டு வந்துட்டா, அப்புறங் கேக்க வேண்டாம். ஆனுல் தூரந்தொலேயா இருக்குமேன்னுதான் தம்பிக்கு யோசனேயா இருக்கும்.

**நட :** அதெல்லாம் ஒன்றுமில்லே, அப்படி இருந்தால் கொஞ்சம் தயவுசெய்து அவரிடம் சொல்லி ஏற்பாடு செய்யுங்களேன்.

**காமா:** நாளேக்கு நடக்கவேண்டிய காரியத்துக்கு ஒன்னே யுங் காணேம். அதெ விட்டுட்டு என்னென்னமோ மேலேக்கு நடக்கிறதெப் பத்திப் பேசுறீங்களே.

**முனி :** அதென்னங்க பிரமாதம். செட்டியாரு நல்ல மனுஷன், அதுலேயும், நான் சொன்னுத் தட்டமாட்டாரு; மொதல்லே 100, 200 முன் பணமா வாங்கி இப்பக் கட்டி விட்டுப் பாக்கியை மாசா மாசம் கொஞ்சங் கொஞ்சமாகக் கட்றேன்னு சொன்னு சேர்வை கேக்காமேயா போயிடுவான்? அப்படி நான் சொல்லி யும் அவன் கேக்கலேன்னு அவன் இந்த ஊருலேருந்து பொளேச்சிடுவாஞ, என்ன?

**காமா :** என்னமோப்பா, நீயாவது எங்க விஷயத்திலே இவ்வளவு தூரம் எரக்கங்காட்டி ஒத்தாசை செய்ய றேங்கிறியே, நீயும் உன் பிள்ளெகுட்டியும் ஜென்ம ஜென்மத்துக்கும் நல்லா இருக்கணும்.

**நட:** நீங்க இந்தச் சமயத்திலேயே இந்த உதவியைச் செய்தால் இதை நான் எப்பொழுதும் மறக்க முடியாது.

**முனி:** அடடே இது என்னுங்கப் பிரமாதம். சரி, நான் போய் செட்டியாரைப் பார்த்துக் காரியத்தை முடிச்சிக்கிட்டு விளக்கு வைக்கிறத்துக்குள்ளே வந்திடுறேன். ஆனு நானும் பிள்ளெக் குட்டிக்காரன். நமக்கு எங்கேயும் குடுக்கிற மாதிரி ரூபாய்க்கு கால் ரூவா கமிசன் உண்டு. அதெல்லாம் உங்களுக்குத் தெரியாததா என்ன...அப்ப...நான் வரட்டுங்களா?

**நட:** ஆகா! அதெல்லாம் உங்கள் மனம்போல் செய்வோம். நீங்கள் மட்டும் எப்படியாவது காரியத்தை......

**முனி:** அடாடா இந்த முனியாண்டிக்குச் சொல்லவா வேணும். நான் வர்ரேனுங்க, ம்............ஏதாவது சில்லரை...

**நட:** எல்லாம் காரியம் முடியட்டும்; பிறகு......

**முனி:** மகமாயி...... (போகிருன்)

---

## காட்சி 11.

---

இடம்: ரோடு

**பாத்திரங்கள்:** ஜம்பு; முனியாண்டி,

[ஜம்புவும் முனியாண்டியும் பேசிக்கொண்டு வருகிருர்கள்]

**முனி:** அந்தக் கவலேயே உங்களுக்கு வேண்டாம்.

**ஜம்பு:** அப்போ நாளேக்குப் பிரயாணம் நிச்சயம் தானு?

**முனி:** அதுதான் முடிஞ்சு போன விஷயமாச்சே!

**ஜம்பு:** எப்படி என் யோசனே?

முனி : யோசனை என்னமோ ஒங்க யோசனைதான்; ஆனா அதை உருப்படியா முடிச்சிவச்சுது நான்; பாருங்க!

ஐம்பு : ஆமாமா! அது மறந்துடுவேனா என்ன?

முனி : அதானே கேட்டேன், அப்புறம் இந்த சாக்கே வச்சிக்கிட்டே கையெ விரிச்சிட்டா......

ஐம்பு ; என்னையா! பெரிய சந்தேகப் பிராணியா இருக்கிறியே. பெண் கழுத்திலே தாலி ஏறிய உடனே ரூபாய் ஐநூறு கைமேலே வந்திடும்.

முனி : விஷயம் பெரிசு; ஏதாவது கொஞ்சம் அட்வான்ஸா.

ஐம்பு : நீ தான் அப்பப்போ வாய்க்கரிசி வாங்கிக்கிட்டே இருக்கியேய்யா. சரி டயமாச்சு நாளைக்குப் பாரும்.

முனி : ஏதாவது சில்லரை இருந்தா......

ஐம்பு ; சில்லரையா? இந்தாரும்.

(சில்லரை கொடுக்கிறான்)

முனி : (வாங்கிக்கொண்டு) மகமாயி......

(போகிறார்கள்)

---

## காட்சி 12

---

இடம் : நடராஜன் வீடு — காலம் : காலை

பாத்திரங்கள் : காமாட்சி, நடராசன், லீலா.

[நடராசன் ரெங்கோன் புறப்படத் தயார் செய்துகொண்டிருக்கிறான். லீலா தமயனுக்கு வேண்டிய சாமான்களையும் துணி மணிகளையும் பெட்டியில் எடுத்து வைத்துக்கொண்டிருக்கிறாள். காமாட்சி முந்தானையில் கண்ணைத் துடைத்துக் கொள்ளுகிறாள்.]

காமா : என்னமோப்பா நீ பொறந்த நேரம் இப்படியெல்லாம் ஆகணூன்னு இருந்திருக்கு. (அழுகிறாள்)

**நட:** இதெல்லாம் மனித வாழ்க்கையிலே சகஜம் தானே? ஏம்மா புறப்படும்போது இப்படி அழுகிருய்? லீலா! மணி ஏழுக்குமேல் ஆகிவிட்டது. எட்டு மணிக்கு ட்ரையின்; டயமாச்சு சீக்கிரம் ஆகட்டும்.

**லீலா:** ஏன் அண்ணு! ரெங்கோனுக்குக் கணக்கு வேலைக் குப்போனுல் மூன்று வருஷத்துக்குக் குறைந்து வர முடியாது என்று சொல்லுகிருர்களே......

**நட:** யார் அப்படிச் சொன்னது? உன்னை விட்டு விட்டு நான் அங்கே நீண்ட நாள் தங்குவேனு? கண்டிப் பாய் ஒரு வருஷத்திற்குள் திரும்பிவிடுவேன். நீ ஒன்றுக்கும் கவலைப்படாதே லீலா.

**லீலா:** நான் எப்படி அண்ணு உங்களை விட்டுப் பிரிந்து ஒரு வருஷம்வரை தனியாய் இருக்கமுடியும்? நானும் எவ்வளவோ மனதைச் சமாதானம் செய்துதான் பார்க்கிறேன்; முடியவில்லையே? (ஆத்திரத்தோடு பெருமூச்சு விட்டு அழுகிருள்)

**நட:** இதென்ன லீலா! நீயும் அம்மாவைப்போல் அழ ஆரம்பித்துவிட்டாய்? நீ சின்னப்பிள்ளையா என்ன? அட பைத்தியமே! படித்த பெண்ணுச்சே! உனக்குக் கூடவா நான் தைரியம் சொல்லவேண்டும்? நீயல்லவா அம்மாளுக்குத் தைரியம் சொல்லி எல்லாவற்றையுங் கவனித்துக் கொள்ள வேண்டும். என்ன பிரமாதம்! ஒரு வருஷந்தானே! எனக்குக்கூட உன்னை விட்டுப் போக வருத்தமாய்த்தான் இருக்கிறது. வீணுகக் கவலைப்பட்டு என்ன பிரயோசனம்?

**சர்மா:** என்னைப் பத்தி ஒன்னுமில்லே, லீலாவுக்கு ஒரு கலியாணத்தே பண்ணிப்புட்டுப்போனு......

நட : ஆரம்பித்துவிட்டாயா அம்மா மறுபடியும். உன் குழந்தைக்கு வயது இன்னும் 14 கூடப் பூர்த்தியாக வில்லை. அதற்குள் என்ன கல்யாணம் வேண்டிய திருக்கிறது? மேல் நாடுகளிலெல்லாம் பெண்களுக்கு எத்தனை வயதுக்குமேல் கலியாணம் செய்வார்கள் என்று தெரியுமா?

காமா : ஏண்டாப்பா அவுங்களுக்கும் நமக்கும் ஈடுகாட்ட முடியுமா? அவுங்க நெனைச்சா கல்யாணம் பண்ணிக் கிருவாங்க, நெனைச்சா ரத்து பண்ணிக்கிருவாங்க; ஒருத்தியே பல புருஷனைக்கூட கட்டிக்கிருவா என் றெல்லாம் கேவலமா நீயே அவங்களெப்பத்தி எத்தினி தரஞ் சொல்லியிருக்கே! நம்ம நாட்டுக்கு அதெல் லாம் ஒத்துவருமா? ஒரு வயசுப் பொண்ணெ வச்சுக் கிட்டு நான் ஒண்டியா எப்படித்தான் காலந்தள்ளப் போறேனோ? ஒலைவாயை மூடினாலும் ஊருவாயெ மூட முடியாதுன்னு சொல்லுவாங்களே......

நட : போதும் போதும்; அடாடா! எப்பொழுதும் உன்னுடன் இதுதான் தொல்லை. எல்லாம் நான் வந்ததும் முடித்துவிடலாம் என்று சொன்னால் நீ வெள்ளைக்காரப் பெண்களை விமர்சனம் பண்ண ஆரம்பித்துவிட்டாயே! ஏன் அவர்களும் நம் நாட்டுப் பெண்களைப்போல் 10 வயதுக்குள்ளேயே கல்யாணம் செய்துகொண்டு, 12-லிருந்து 20 வயதுக்குள்ளே ஏழெட்டுப் பிள்ளைக்குத் தாயாகித் தொண்டு கிழவி யைப்போல் தள்ளாட வேண்டுமென்கிறாயா என்ன? ......போம்மா! லீலா கல்யாணத்துக்கு இப்பொழுது ஒன்றும் அவசரம் இல்லை. எல்லாம் நான் வந்த பிறகு நல்ல இடமாகப் பார்த்துச் செய்துகொள்ளலாம். நீ அதை நான் இங்கு இருக்கும்பொழுது பேசுவது போல் சிடுக்கு வெடுக்கென்று ஒன்றும் சொல்லாமல்

ஜாக்கிரதையாய்ப் பார்த்துக்கொள்; என்ன? நான் சொன்னதெல்லாம் ஞாபகம் இருக்கிறதா? லீலா! நீயும் அம்மாளை ஜாக்கிரதையாய்ப் பார்த்துக்கொள், அடிக்கடி தபால் எழுது......

**ஜட்காவாலா :** அரே! என்னுங்கோ சாமி! ஒங்களுக்காவ எவ்வளவு நாயி சாமி காத்துக்கிட்டு இருக்கிறது? அங்கே எங்கஞ நின்னுலும் கோரட்டுக்கும் டேசனுக்குமா மூணு நாலு நடை அடிச்சிருப்பேனே சாமி.

**நட :** சாயபு! இதோ ஆய்விட்டது; போகலாம். கொஞ்சம் பொறு, இதோ இந்தப் பெட்டி படுக்கைகளை வண்டியில் எடுத்துவை. (எடுத்துவைக்கிறுன்) சரி டயமும் அதிகமாகிவிட்டது. ஏம்மா! நான் வரட்டுமா? லீலா! போய்விட்டு வரட்டுமா? நான் சொன்னது ஞாபகம் இருக்கட்டும். கவலைப்படவேண்டாம். நான் போனவுடன் தபால் எழுதுகிறேன். போய் வருகிறேன். (காமாட்சியை வணங்குகிறுன். லீலா நடராஜனை வணங்குகிறுள்.)

(நடராஜன் போகிறுன்)

---

## காட்சி 13.

---

**இடம் :** திவான்பகதூர் மாளிகை. **காலம் :** காலை.

**பாத்திரங்கள் :** திவான்பகதூர், முனியாண்டி, காமாட்சி.

[முனியாண்டியும் திவான்பகதூரும் பேசிக் கொண்டிருக்கிறுர்கள்.]

**முனி :** என்ன வெறப்புங்க அந்தப் பையனுக்கு! ஒங்க பேரைச் சொன்னு நல்லபாம்பு மாதிரியில்லே சீறுது.

**பொன் :** சீறுவான் சீறுவான்; சீறமாட்டானா? சரி. பாக்கிக் காரியமெல்லாம் எப்படி? என்ன ஏற்பாடு செய்திருக்கிறாய்?

**முனி :** அது தானுங்க! அந்தப் பையனை சம்மதிக்க வச்சு, செட்டியையும் சரிப்படுத்தி, ஒருவழியா ஊருக்கு அனுப்பினேனா?

**பொன் :** ஆமாம், அப்புறம்?

**முனி :** அப்புறம் என்னுங்க! முனியாண்டி சும்மாவா இருந்துடுவான்னு நினைக்கிறீங்க! பையன் ஊருக்குப் போனதிலே இருந்து இந்த ஒரு வாரமா ஒழிஞ்ச நேரமெல்லாம் எனக்கு அங்கேதான் வேலை அப்படி இப்புடீன்னு உங்க பெருமையெல்லாம் அள்ளிவிட்டு அதைச் செய்வாரு இதைச் செய்வாருன்னு சொல்லி பெரியம்மா ஒரு மாதிரி நம்ம வழிக்கு வந்துட்டாங்க. இப்பக்கூட இங்கே வந்ததாகச் சொன்னுங்க.

**பொன் :** என்ன! உண்மையாகவா? காமாட்சியே இங்கே வருவதாகச் சொல்லிற்று? எப்பொழுது எத்தனை மணிக்கு.........?

**முனி:** அதுக்குள்ளே எஜமான் இப்படி அவசரப்பட்றீங்களே! அதெல்லாம் நான் பார்த்துக்குறேன். எல்லாந் தானா நடக்கும்; நீங்கபாட்டுக்கு இருங்க.

**பொன் :** சபாஷ் முனியாண்டி! நீ இவ்வளவு தூரம் செய்வாயென்று நான் எதிர்பார்க்கவே இல்லை. சரி காமாட்சி வரட்டும். அதெல்லா மிருக்கட்டும். முனியாண்டி! நீ என்னைப் பற்றிப் பேசும் போதெல்லாம் லீலா அங்கே இருப்பாளா? சந்தோஷப்படுவாளா. நீ பார்த்தவரையில் என்மேல் அவளுக்குப்...

**முனி :** *சிறுசு தானுங்களே! இன்னமே நீங்கள்தான் எல்லாம் சரிப்படுத்திக் கொண்டாரணும்......அதோ அந்த அம்மாகூட வந்துட்டாங்களே!*

*(காமாட்சி வருகிருள்.)*

**பொன் :** *வாவா! காமாட்சி வாம்மா! இப்படி உட்கார். அடாடா! இவ்வளவு தூரம் நடந்தா வந்தே? நீ வருவாயென்று இப்பொழுதுதான் முனியாண்டி சொன்னுன், என் காரையே அனுப்பி வைக்கலாம் என்று நினைத்தேன்; அதற்குள்......*

**காமா :** *பரவால்லேண்ணு. இந்தப் பாழாப்போன கட்டைக்கு காரு வேறையா வேணும் காரு!*

**பொன் :** *ஏன் காமாட்சி! நீ என்ன அப்படிச் சொல்லுகிருய்? என் மூச்சு உள்ளவரை உனக்கென்ன குறை? உன் குணம் எனக்குத் தெரியும். உன் மகன் மட்டும் ஒழுங்காய் இருந்திருந்தால் உங்களை இப்படிக் கஷ்டப் பட விட்டிருப்பேனு?*

**காமா :** *ஆமாம். யார் இருந்து என்ன? என்னமோ பாடி பரதேசியா யிருந்தாலும் முனியாண்டி சமயத்திலே வந்து உதவினுன். அவனுவது இந்தச் சமயத்திலே உதவாமல் இருந்திருந்தால் குடியிருக்கிற குச்சையும் இழந்துவிட்டு என் பிள்ளைகுட்டிகளோட நான் சந்தியிலே நிற்கவேண்டியதுதான்.*

*(துணியை முகத்தில் வைத்து அழுகிருள்.)*

**பொன் :** *ஓகோ! நீ அப்படியா நினைத்துக் கொண்டிருக்கிருய்! இந்தத் திவான்பகதூர் பொன்னம்பலம்பிள்ளை மனது வைக்காமல் இருந்திருந்தால், முனியாண்டியும் உதவியிருப்பான்! சேர்வையும் சும்மா விட்டிருப்பான்! செட்டியும் இந்தக் காலிக் கழுதையைக் கூட்டிக்*

கொண்டு போயிருப்பான்! என்னமோ அந்தப் பாவிப் பயலுக்காகப் பார்த்தால் அநியாயமாக நம் தங்கை குடும்பம் கெட்டுப்போகுமென்று நினைத்துத்தான் மறைவாயிருந்து இவ்வளவு ஏற்பாடும் செய்தேன். உங்களுக்கு ஏது அந்த நன்றி?

**காமா :** உண்மையாகவா? இப்படீன்னு இதுவரைக்கும் எனக்குத் தெரியாதே! ஏனப்பா முனியாண்டி! நீ கூட இதுவரைக்கும் இப்படீன்னு ஒரு வார்த்தை சொல்லலையே.

**முனி :** எஜமான்தான் இந்தக் காரியமே ஒருவருக்கும் தெரியக்கூடாதுன்று சொன்னுங்க! அதனுலேதான் நானும் சொல்லலே.

**காமா :** அப்படியேதான் இருக்கட்டுமே; கூடப் பொறந்தவளுக்கு நீங்க செய்யாமே வேறே யாருதான் உதவி செய்யப் போரு?

**பொன் :** ஆமாம். செய்து செய்து என்ன பலன்? தூற்றலும் ஏச்சும் அவமதிப்புந்தான். என் குடும்பமும் நன்ருயிருக்கவேண்டுமெ என்ற எண்ணம் இருந்து, நாம் பிறந்த குடும்பம் இந்தத் தலைமுறையோடு பூண்டற்றுப் போய்விடுமே என்ற கவலையும் இருந்தால் இத்தனை நாள் கழித்து வலிய வந்த என்னை அவன் அப்படி அவமதித்து அனுப்பியதைப் பார்த்துக் கொண்டு இருந்திருப்பாயா? எனக்கென்ன உலகத்திலேயே வேறு பெண் கிடைக்காதென்று உன் பெண்ணைக் கேட்க வந்தேன்?

**காமா :** என்னண்ணு இப்படிச் சொல்றீங்க? நானு வேண்டாமுன்னு சொன்னேன். ஒங்களுக்கே என் பெண்ணைக் கட்டி வைக்கணும். அதுக்காவது ஒரு குழந்தை குட்டி பிறந்து நம்ம பொறந்த எடத்துப்

பேரு சொல்லணுன்னுதான் எனக்கு மட்டத்த ஆசை. அதுக்குத்தான் அந்தப் பயல் முட்டுக் கட்டையா இருந்தானே! நான் என்ன செய்வேன்?

**பொன்:** ஆமாம், உலகத்தில் எல்லாவற்றிற்கும் ஏதாவது ஒரு சாக்குச் சொல்ல வழி உண்டு! முட்டுக்கட்டையாக இருந்த அவன்தான் இங்கே இல்லையே! இப்பொழுதுதான் நீ ஆகட்டுமென்று சொன்னுலென்ன?

**காமா:** என்னப்பத்தி என்னண்ணு யோசனை? அவன் இல்லாதபோது......

**பொன்:** பார்த்தாயா! முதலில் அவன் முட்டுக்கட்டையாய் இருந்தான் என்ருய். இப்போது அந்த முட்டுக் கட்டை இல்லையே யென்று வருத்தப் படுகிருய்! உம். பேஷ் காமாக்ஷி! ரொம்ப நன்ருயிருக்கிறது உன் பேச்சு, நான் எப்படிப் போனுல் உனக்கென்ன?

**காமா:** சரி, சரி! அதெல்லாம் ஒன்னும் வேண்டாம். நான் இன்னைக்கி அவளையே நேரில் கேட்கிறேன். அவள் சரீன்னு சொல்லிட்டா......

**பொன்:** இதோ பார் காமாக்ஷி! நீ என்ன சுத்தக் கர்னுடகமாக இருக்கிருயே? தனக்கு இன்ன மாப்பிள்ளைதான் வேண்டுமென்று கல்யாணப் பெண் வெட்கத்தை விட்டு வெளியே சொல்லுவாளா எங்கேயாவது? இல்லை எவனுவது ஒரு காலிப்பயலையோ அல்லது அன்னக்காவடியையோதான் கட்டிக் கொள்வேன் என்று சொன்னுல் அவள் இஷ்டத்திற்கு விட முடியுமா? நாம் பார்த்துக் கழுத்தை நீட்டு என்று சொன்னுல் நீட்டவேண்டிய பெண்ணிடம், யோசனை கேட்கப் போகிறேன் என்கிருயே! அடே யாரடா அங்கே! (ஒருவன் ஓடி வந்து நிற்கிருன்) காப்பி கொண்டுவா! (உள்ளே போகிருன்) முனியாண்டி!

வெற்றிலைத் தட்டைக் கொண்டுவரச்சொல். (அனை வரும் சாப்பிடுகிறார்கள்) சரி இதோ பார் காமு! இனிமேல் நாளைக் கடத்தக்கூடாது. வீட்டில் பெண் பிள்ளை என்று ஒருத்தி இல்லை யென்றால் எவ்வளவு கஷ்டம் என்பது உனக்குத் தெரியாதா என்ன? நான் ஒருவன் எவ்வளவு காரியங்களைத்தான் கவனிக்க முடியும்? (வேலைக்காரனைப் பார்த்து) அடே முட்டாள்! வெற்றிலைத் தட்டை எடுத்துக் கொண்டுவந்து வையடா! (வெற்றிலைத் தட்டை வைக் கிறான்) ஊம், காமு! வெற்றிலை போட்டுக்கொள். (தட்டைக் காமாட்சியிடம் எடுத்துக் கொடுக்கிறார்) இந்த மாதம் 22-ந் தேதி ஒரு நல்ல முகூர்த்தம் இருக்கிறதாம். அந்த முகூர்த்தத்திலேயே கூட வைத்து விடலாம். என்ன முனியாண்டி?

**முனி :** ஆமாமா, சீக்கிரமா முடிகிறதுதான் தேவலை. எத்தனை ஆள் மாகாணங்கள் இருந்தாலும் வீட்டுக் குன்னு ஒரு சிதேவி இல்லேன்னா அது என்னாக் குடித்தனங்க?

**காமா :** 22-ந் தேதின்னா, ஒரு வாரங்கூட இல்லையே! அவ்வளவு அவசரமா செய்யாட்டி என்னண்ணா? கொஞ்ச...

**பொன் :** ப்பூ...ஒரு வாரத்திலே எட்டுக் கல்யாணம் செய்ய லாம். இப்ப எந்த சாமான் இல்லையே என்று கவலைப் படப்போகிறோம்? இதோபார் (பீரோவைத் திறந்து ஒரு பெட்டியை யெடுத்து நகைகளை அள்ளிப்போட்டு) இந்தா இவைகளை யெல்லாம் கொண்டுபோய் லீலா வுக்குப் போடு. இனிமேல் அவள் திவான் பகதூர் மனைவி (ஒரு கத்தை நோட்டை எடுத்து வீசி) இதோ இந்தப் பணத்தை வைத்துக்கொள். அவளுக்கு வேண்டிய துணிமணி எல்லாம் வாங்கிக்கொண்டு

நீயும் வாங்கிக் கொள். அவள் என்ன கேட்டாலும் வாங்கிக் கொடு; போதாவிட்டால் சொல்லி அனுப்பு. வேண்டிய பணம் அனுப்புகிறேன். இதோ பார்! இந்தச் சங்கிலி 20 பவுன். இப்பொழுது கடைசியாய் மூன்ருந்தாரமாக வாழவந்தாளே மங்களம், அவளுக் காகச் செய்தது. இதை நீ போட்டுக்கொள். இன்னும் வேண்டியதை சங்கோஜமின்றிக் கேள்.

**காமா :** எனக் கென்னத்துக்கண்ணு இதெல்லாம்.

**பொன் :** அடடே! பயித்தியம்; சும்மா போட்டுக்கொள்; நீ ஒரு திவான் பகதூருடைய மாமியாரல்லவா? சும்மா போட்டுக்கொள்.

**காமா :** ஏண்ணு? இதெல்லாம் இருக்கட்டும். அந்த வீடு...

**பொன் :** எனக்கென்ன அவ்வளவு தூரம் தெரியாதென்று நினைத்துவிட்டாய்!... (ஒரு பத்திரத்தைக் காட்டி) இதோ பார்! சேர்வைக்குப் பூருத்தொகையும் செலுத் திக் கணக்கைத் தீர்த்துப் பத்திரத்தையும் திருப்பி வாங்கி வைத்திருக்கிறேன். இது மட்டுமா? கீழக் குறிச்சி கிராமப் பட்டாவை அப்படியே லீலா பேருக்கே மாற்றிவிட ஏற்பாடெல்லாம் செய்திருக் கிறேன்.

**காமா :** உம்...இதை யெல்லாம் கொஞ்சம்கூட யோசிக் காம அந்தப் பையன் ஒங்களே எவ்வளவு தூரம் பேசிப்புட்டான்.

**பொன் :** அவன் போகிருன் மடையன், சின்னப் பையன் தானே? என்னமோ தெரியாமல் பேசிவிட்டான். அதற்காக நான் உங்களை வெறுத்துவிட முடியுமா என்ன? (வேலையாள் வருகிருன்)

**வேலை ஆள் :** சாப்பாடு தயாராகிவிட்டது.

**பொன் :** சரி, இலே போடு. இதோ வருகிறோம். (வேலை யாள் போகிறான்) சரி காமாட்சி! எழுந்திரு, முதலில் சாப்பாட்டை முடித்துக்கொண்டு மற்றவற்றைப் பேசிக்கொள்ளலாம்.

**காமா :** இல்லே யண்ணு! லீலா, வீட்டில் தனியா இருக்கா. நான் உடனே திரும்பி வந்துவிடுவதாகச் சொல்லி விட்டு வந்தேன். நீங்க சாப்பிடுங்க, நான் வீட்டுக்குப் போயிட்டு நாளைக்குக் காலேயில் வர்ரேன்.

**பொன் :** நன்ருயிருக்கிறது, உன்னிடம் இன்னும் பேச வேண்டியது நிறைய இருக்கிறது. சாயங்காலம் கார் அனுப்புகிறேன்; அதில் போகலாம். லீலா சின்னக் குழந்தையா என்ன? எழுந்திரு. (இருவரும் சாப்பிடப் போகிருர்கள்.)

---

## காட்சி 14.

---

**இடம் :** பூந்தோட்டம். **காலம் :** மாலே.

**பாத்திரங்கள் :** லீலா, பாலசுந்தரம்.

[லீலாவும், பாலசுந்தரமும் கிணற்றங்கரை யில் உட்கார்ந்து பேசிக்கொண்டிருக் கிருர்கள்.]

**பாலு ;** லீலா! இப்படியே வருத்தப்பட்டுக் கொண்டிருந் தால் உடம்பு என்ன ஆகும்? உன் அண்ணன் மட்டும் தாஞ அதிசயமாக ரெங்கோனுக்குப் போயிருக்கிருர்? எத்தனேயோ லக்ஷக்கணக்கான ஜனங்கள் தாய் நாட்டைத் துறந்து வயிற்றுப் பிழைப்புக்காக வெளி நாடுகளுக்குச் சென்று எவ்வளவு கஷ்டப்படுகிருர்கள் தெரியுமா?

**லீலா :** இருக்கலாம். இருந்தாலும் பிறந்தது முதல் இணை பிரியாது வளர்ந்து, இடையில் பிரிய நேர்ந்தால் எப்படி வருந்தாமல் இருக்க முடியும்? மேலும் இவ் வளவு நாளாய் எங்களைத் திரும்பிக்கூடப் பாராமல் இருந்த என் மாமாவுக்கு இப்போது திடீரென்று எங்கள் குடும்பத்தின்மீது இரக்கம் பிறந்திருக்கிறது. அம்மாவும் அடிக்கடி அங்கே போக ஆரம்பித்திருக் கிறார்கள்.

**பாலு :** அதனாலென்ன? அண்ணன் தங்கையென்றிருந் தால் ஒருகாலம் இல்லாவிட்டாலும் ஒருகாலத்தில் சேராமல் இருக்க முடியுமா? உன் அண்ணன்தான் பெரிய ரோஷக்காரர். ஏன்! இந்தச் சமயத்திலாவது ஒத்துப்போய் விஷயத்தை எடுத்துச் சொல்லிக் கேட் டிருந்தால் உன் மாமன், ஏதாவது உதவி செய்திருக்க மாட்டாரா!

**லீலா :** ஆமாம். அவர் உதவியை எதிர்பார்த்தால் நான் சாகவேண்டியதுதான்.

**பாலு :** ஏன்?

**லீலா :** அவருக்கு என்னை நாலாந்தாரமாகக் கல்யாணம் செய்து கொடுப்பதாய் இருந்தால், அவர் எந்த உதவியும் செய்யத் தயாராம்.

**பாலு :** என்ன! உன்னையா? உண்மையாகவா? இனி மேலா அவர் கலியாணம் செய்துகொள்ள விரும்பு கிறார்? பேஷ்! அவருக்கு ஏதாவது கொஞ்சம் மூளைக் கோளாறு ஏதும்......இருக்குமா?

**லீலா :** பத்து நாளைக்கு முன் ஒரு நாள் எதிர்பாராத முறையில் காரைப் போட்டுக்கொண்டு ஏக ஆடம் பரமாய் எங்கள் வீட்டுக்கு வந்தார்.

**பாலு :** என்ன! திவான் பகதூரா! உங்கள் வீட்டுக்கா! பிறகு?

**லீலா :** அண்ணனைக் கண்டதும் அம்மாவுக்கு ஆனந்தம். தாங்க முடியவில்லை. அதைச் செய்கிறேன் இதைச் செய்கிறேனென்று என்னென்னமோ பீடிகை போட்டுக் கடைசியில் சுற்றி வளைத்து சம்பந்தப் பேச்சுக்கு வந்துவிட்டார். இதைக் கேட்டதும் நான் நடுங்கியே போய்விட்டேன்.

**பாலு :** அப்புறம் முடிவு என்ன ஆயிற்று?

**லீலா :** அதைத்தானே சொல்லுகிறேன்; அதற்குள் பொறுக்கவில்லையா?

**பாலு :** வீணுகக் கதையை வளர்க்கவேண்டாம்; முடிவு என்ன?

**லீலா :** முடிவு என்ன, இந்தப் பேச்சு நடந்துகொண்டிருக்கும்போது அண்ணு வந்தார்...

(சிரிக்கிருள்)

**பாலு :** என்னதான் நடந்தது சொல்லேன்; நானும் சேர்ந்து சிரிக்கிறேன்,

**லீலா :** கொஞ்ச நேரம் அண்ணு சம்மதிப்பவர்போல் விளையாட்டாகப் பேசிக்கொண்டே போனுர். நான்கூட ஏமாந்துவிட்டேன். அப்புறம் திடீரென்று ஆல்ரைட் திவான்பகதூர்! கிளம்பலாம் என்று.........அப்பா... அப்பொழுது அண்ணுவுக்கு வந்த கோபத்தைப் பார்க்க வேண்டுமே! என்ன நடந்து விடுமோ என்று எனக்குப் பயமாகவே இருந்தது.

**பாலு :** அப்புறம்?

**லீலா :** கடைசியில் மாமாவந்து நான் திவான்பகதூர் என்பது உண்மையானுல் உன்னை என்ன செய்

கிறேன் பார் என்று சபதம் செய்துவிட்டு (சிரித்துக் கொண்டே) டிரைவர்! காரையெடு என்ருர்...........
அந்த டிரைவர் வந்து, எஜமான்! நாலு ஆள் வேணும் கொறைச்சி தள்ளணும், என்ருன்.

(சிரிக்கிருள்)

பாலு : (சிரித்து) ஆகா, அந்த ரசமான காட்சியை நான் பார்க்காமல் போய்விட்டேனே! திவான் பகதூர் உங்களுக்குத் தீங்கு செய்வாரென்றே நினைக்கிறேன்.

லீலா. சேர்வை, பிராது போடுவதாக நோட்டீஸ் அனுப்பியதற்குக் கூட திவான்பகதூர்தான் காரணமாயிருக்க வேண்டுமென்று அண்ணுவுக்குச் சந்தேகம்.

பாலு : அப்படியாஞல், எல்லாமே திவான் பகதூரின் தூண்டுதலில்தான் நடந்திருக்கும் போல் தெரிகிறது. எல்லாம் தெரிந்திருந்தும் இந்தச் சமயத்தில் ஏன் உன் அண்ணு ரெங்கோன் போகச் சம்மதித்தார்.

லீலா : வேறென்ன செய்வது? இந்தச் சமயத்தில் அதையும் விட்டுவிட்டால் குடியிருக்கும் வீடும் போய் விடும் மேலும்.........அம்மா......

பாலு : ஊம், அம்மாதான் இருக்கிருர்களே அம்மா, உன் அம்மாவை நீதான் மெச்சிக்கொள்ளவேண்டும். நடந்திருக்கும் ஏற்பாடுகளைப் பார்த்தால் உன் அம்மாவே உன்னைத் திவான் பகதூருக்குக் கல்யாணம் செய்து கொடுக்கத் தயார் போலிருக்கிறது.

லீலா : யார் எதைச் செய்தாலும் சரி. இந்த உடலில் உணர்ச்சியோ, உயிரோ இருக்கும் வரை அது நடைபெருது. ஆனல் நாம் எதற்கும் கொஞ்சம் ஜாக்ரதையாகத்தான் இருக்கவேண்டும்.

பாலு : ஆமாமாம்; அவர் திவான்பகதூர்; பண பலம் அதிகமாக உள்ள அவர் நினைத்தால் எதையும்

செய்யலாம். அவர் விஷயத்தில் ஜாக்ரதைக் குறை வாய் இருக்கலாமா?

லீலா: அவர் பணமும், பட்டமும், பதவியும் நம்மை என்ன செய்துவிட முடியும்? நாம் மட்டும் ஒரே உறுதியாக இருந்தால் நம்மைப் பிரிக்க யாராலும் முடியாது. சரி, நாழியாகிவிட்டது; இந்நேரம் அம்மா வந்திருந் தாலும் வந்திருப்பார்கள். நீங்கள் நாளை மாலை வருகிறீர்களா!

பாலு: ஆமாம், இப்போது உன் தாயார் எங்கே போயிருக் கிறார்கள்?

லீலா: மாமா வீட்டுக்குத்தான். அதுதான் முன்பே சொன்னேனே!

பாலு: ஆமாம் மறந்து விட்டேன்......நாளை நான் ஒரு முக்கியமான வேலையாக வெளியூர் போகிறேன். வர இரண்டு மூன்று நாட்கள் ஆகலாம். அநேகமாக ஞாயிற்றுக்கிழமை மாலை சந்திக்கிறேன்.

லீலா: ஞாயிற்றுக்கிழமையா? வியாழன், வெள்ளி, சனி, ஞாயிறு அம்மாடி! நான்கு நாட்களா ஆகும்? அது வரை நான் எப்படி உங்களைப் பார்க்காமல் இருக்க முடியும்? அப்படி என்ன முக்கியமான வேலை அது?

பாலு: கால் பந்து விளையாட்டுப் போட்டிக்காக எங்கள் காலேஜ் மாணவர் குரூப் ஒன்று வெளியூர் புறப்படு கிறது! அத்துடன் நானும் போக வேண்டும். கண் டிப்பாய் எப்படியும் ஞாயிற்றுக்கிழமை மாலை உன்னை இதே இடத்தில் சந்திக்கிறேன். நான் வரட்டுமா?

லீலா: ஞாயிற்றுக்கிழமை மாலை மறந்துவிடமாட்டீர்களே!

**பாலு :** இல்லே! நிச்சயமாய் மறக்கமாட்டேன். வருகிறேன்.

(புன்முறுவலோடு விடைகொடுக்கிருள் ;
போகிருன். பெருமூச்சிடுகிருள்.)

**லீலா :** (தனக்குள்) என் இன்பக்கனவு நனவாகும் நாள் என்றே?

---

## காட்சி 15.

---

இடம் ; வீதி

**பாத்திரங்கள் :** ஐம்பு, சுப்பையா.

[ஐம்புவும், சுப்பையனும் வருகிருர்கள்]

**ஐம்பு :** டேய் சுப்பையா!

**பையன் :** வாங்க கணக்கப்பிள்ளே ஐயா, எஜமான் ஓங்களேக் கையோட கூட்டிக்கிட்டு வரச்சொன்ஞங்க; ஓங்க வீட்டுக்குத்தான் வந்துக்கிட்டிருந்தேன்.

**ஐம்பு :** எதுக்குடா?

**பையன் :** எஜமான் தங்கச்சி யில்லிங்க, அவங்க வந்திருக்காங்க.

**ஐம்பு :** அப்படியா! என்ன விஷயம்?

**பையன் :** எல்லாம் முடிஞ்சு போச்சு. எஜமானுக்கு நாள் பார்க்க வேண்டியது ஒன்னுதான் பாக்கி.

**ஐம்பு :** எஜமானுக்கு நாள் பாக்கணுமா?

**பையன் :** ஆமாங்க, எல்லா ஏற்பாடும் முடிஞ்சு போச்சு. ஐயரையுங் கூட்டிக்கிட்டு வரச்சொல்லி

விட்டாங்க. கழுத்திலே கயத்தைப் போடுறதுக்கு நாள் பாத்துட்டா கல்யாணம் முடிஞ்சமாதிரி தான். உம், புறப்படுங்க.

**ஐம்பு:** சரி. நான் முன்னாடிப் போறேன்; நீ போயி நம்ம பாலகிருஷ்ண சாஸ்திரியேக் கையோட இழுத்துக்கிட்டுவா.

**பையன்:** இதோ!— (போகிறார்கள்)

---

## காட்சி 16.

---

இடம்: நடராஜன் வீடு

பாத்திரங்கள்: லீலா காமாட்சி.

[லீலா கட்டிலில் அமர்ந்து கைக்குட்டை பின்னியபடி பாடிக் கொண்டிருக்கிறாள். காமாட்சி வருகிறாள். ஒரு ஆள் தலையில் இரண்டு மூன்று மூட்டைகளையும் பெட்டியையும் கொண்டு வந்து இறக்கிவைக்கிறான்.]

**லீலா:** இது என்ன அம்மா மூட்டை முடிச்சுகளெல்லாம் பலமாயிருக்கிறதே! இவை யெல்லாம் என்ன?

**காமா:** எல்லாம் ஒனக்காகத்தான். இந்தா இதை வாங்கி அப்படிவை.

(எல்லாவற்றையும் வாங்கி வைக்கிறாள்)

**வேலை ஆள்:** நான் போயிட்டு வரட்டுங்களா அம்மா?

**காமா:** மகராசனுய்ப் போயிட்டு வாப்பா. போயிட்டுவா.

(போகிறான்)

**லீலா :** *இதென்னம்மா! இந்தக் கூடையில்?*

**காமா :** *அதுவா பழங்கள். ஆரஞ்சி, மாதளை, சாத்துக் கட்டி, மலைப்பழம் எல்லாம் நிறைய இருக்கு; எடுத்துக்கோ. வேண்டியதை எடுத்துச் சாப்பிடு. இந்தா! இதெல்லாம் பலகாரங்கள். இதையும் எடுத்துக்கோ. இந்தா பாரு! இதெல்லாம் பட்டுச் சேலையும் ரவிக்கையுந்தான்; அவ்வளவும் நிறையா ஜரிகை போட்டது. எல்லாம் ஒனக்காகத்தான் வாங்கிக்கிட்டு வந்தேன். மொதல்லே அந்தப் பழைய சேலையை அவுத்தெரிஞ்சிட்டு இதிலே நல்லதா ஒனக்குப் புடிச்ச சேலையாப் பார்த்து எடுத்துக் கட்டிக்கோ! (குதூகலத்துடன் எல்லாவற்றையும் கலைத்துப் போட்டுக்கொண்டு லீலா ஆச்சரியத்தோடு சொல்லுகிருள்.)*

**லீலா :** *ஏம்மா! இதெல்லாம் ஏது? அவ்வளவும் புதிதா யிருக்கிறதே!*

**காமா :** *ஏண்டியம்மா! உன் அதிஷ்டத்துக்கு யார் பொறந் திருக்கா. எல்லாம் நல்ல காலத்துக்குத் தானு வரும்! இதைப் பாரு! (நகைப் பெட்டியைத் திறந்து. ஒவ்வொன்ருய் எடுத்துக் காட்டுகிருள்) காசுமாலை! இது கழுத்துச் சங்கிலி, கம்மல், வளவி இதெல்லாம் பாத்தியா? இந்தக் கல்லு நகை யெல் லாம் அவ்வளவும் வைரமாம்! இதெல்லாம் நீ போட்டுக்கிட்டு இந்தச் சேலை ரவிக்கையையும் போட்டுக்கிட்டா உன் அழகுக்கு எவ்வளவு நல்லா இருக்கும்?*

**லீலா :** *இவையெல்லாம் ஏதம்மா என்ருல் அதற்குப் பதில் சொல்லாமல் நீ பாட்டுக்கு வர்ணித்துக் கொண்டே இருக்கிருயே!*

**காமா :** ஏண்டி! ஒன்னே நான் வர்ணிக்காமே பின்னே யாரு வர்ணிப்பா? இன்னமே ஒனக்கு என்ன குறைச்சல்? எத்தனையோ லக்ஷ ரூபாய்க்கு எஜமானி ஆகப்போறே. அப்புறம் அம்மாளைக்கூடக் கவனிக்கிறயோ என்னமோ?

**லீலா :** என்னம்மா சும்மா உளருகிறாய்!

**காமா :** நானு ஒளர்ரேன், அப்படித்தான் இருக்கும். இப்பவே இப்படி இருந்தா அப்புறம் கேக்கவே வாண்டாம், பெத்தவளாச்சேன்னுகூடத் திரும்பிப் பார்க்கமாட்டே.

**லீலா :** (கோபத்தோடும் வெறுப்போடும்) என்னம்மா இது; நீபாட்டுக்குப் புரியாமல் பேசிக்கொண்டே இருந்தால் எனக்குக் கோபம் வரும்.

**காமா :** புரியுமா, புரியாதுதான். கோபங்கூட வரும்தான். ஏன்னு. நீ திவான்பகதூர் பெண்டாட்டியா இல்லையா?

**லீலா :** என்ன! திவான்பகதூர் பெண்டாட்டியா? யார் நானு?

**காமா :** ஆமாண்டியம்மா, ஆமா! நீ தான் இந்த மாதம் 22ெ உனக்கும் உன் மாமாவுக்கும் கல்யாணம் நிச்சயமாயிருக்கு இந்தத் துணிமணி, நகை, நட்டெல்லாம் ஒனக்காகத்தான் அவர் வாங்கிக் குடுத்திருக்கார்.

**லீலா :** போம்மா. இதெல்லாம் என்ன விளையாட்டு!

**காமா :** நெசந்தாண்டின்னு! வெளையாட்டாவது வெளையாவது. இன்ன மட்டும் பேசிக்கிட்டு இருந்துட்டு, அய்யரைக் கூட்டிக்கிட்டு வந்து முகூர்த்த நாளெல்லாம் பார்த்து முடிவு பண்ணிக்கிட்டு வர்ரேங்கிறேன்.

**லீலா:** என்ன! உண்மையாகவா? அம்மா. இதென்ன அநியாயம். உடன் பிறந்த அண்ணன் கண் காணாத நாட்டுக்குப் போய் இன்னும் ஒரு வாரம்கூட ஆக வில்லை; அதற்குள் இது என்ன கூத்து? உனக்கென்ன பைத்தியம் பிடித்துவிட்டதா?

**காமா:** என்னடி இது. என்ன வாயெல்லாம் ரொம்ப அதிகமாப் போச்சே! அண்ணனும் அண்ணன். ஆட்டுக்குட்டி......அவன் இருந்திருந்தா, வருஷம் பத்தானாலும்கூட உனக்கு ஒரு கல்யாணங் காச்சி செய்யனுமின்னு நெனைக்க மாட்டான். எங்க அண்ணன் பார்த்து மனசுவைக்காமெ இருந்திருந்தா நீயும் ஒங்க அண்ணனும் நானும் சந்தியிலே நின்னு பிச்சை எடுக்கவேண்டியதுதான்.

**லீலா:** பிச்சை யெடுத்தாலும்கூடப் பரவாயில்லை. நீ செய்யும் காரியங்கள் அதைவிடக் கேவலமா யிருக்கிறது.

**காமா:** என்னடீது கேவலம்? ஊரு ஒலகத்திலே இல்லாத கேவலத்தே நீ அதிசயமாக் கண்டுட்டே. தாய் மாமனைக் கல்யாணம் பண்ணிக்கரதா ஒரு கேவலம்? (பெருமூச்சு விட்டு) ஊம்......உன்னைச் சொல்லக் குத்தமில்லே, ஒன்னெப் பத்து மாசம் செமந்து பெத்து வளத்து நாலு எழுத்துப் படிக்கவைச்சு, ஆளாக்கிவிட்டேம்பாரு! அதுக்கு இதுவும் பேசுவே இன்னமும் பேசுவே.

**லீலா:** நீ தான் பெற்றாய், வளர்த்தாய், ஆளாக்கிவிட்டாய்; அதற்காக என்னை உயிரோடு சித்திரவதை செய்ய வேண்டுமா? இதைவிட ஒரு பாழுங்கிணற்றில் தள்ளினால்கூடப் பரவாயில்லையே?

**காமா:** நானு ஒன்னேக் சொல்றேங்கிறேன். காலம் கலி காலமா இல்லையா? இந்தப் பஞ்ச காலத்திலே பத்தாயிரம் இருவதாயிரமுன்னு எழுதிவச்சு நெலபலத்தெயும் எழுதிவச்சி நாலாயிரம் அய்யாயிரத்துக்கு நகையும் போட்டுக்கல்யாணம் பண்ணிக்கிறேண்ணு சொல்ருனே. நம்ம பெண்ணு நல்லாருந்தா நமக்குத்தானே கண்ணுக்கு அழகுன்னு பாத்தா, நீ என்னன்னு தலைக்கு மேலப் பேசுரே......ஊம்.........நல்லதுக்குக் காலம் ஏது?.........எல்லாம் ஏம்புத்திக்குச் சொல்லணும்.

**லீலா:** அப்படி ஒன்று உனக்குக் கூடவா இருக்கிறது? இருந்தால் ஐம்பத்தைந்து வயதுக் கிழட்டுப் பிணத்திற்குப் பதினைந்து வயதுக் குமரியை சம்பந்தம் பேசிவிட்டு வந்து சந்தோஷப்படுவாயா? (எல்லை மீறிய ஆத்திரத்தில் வாய் விட்டு) ஐயோ அண்ணு! இந்த அக்ரமத்தை நான் யாரிடம் சொல்லி அழுவேன்! அம்மா! அவன் பணத்தையும், நிலத்தையும், நகைகளையும், துணிமணிகளையும் நீயே கட்டி அழு. எனக்குக் கல்யாணமும் வேண்டாம், கருமாதியும் வேண்டாம். (அங்கு கிடந்த நகை, புடவை முதலிய சாமான்களைக் காலால் எத்திவிட்டுக் கட்டிலில் குப்புற விழுந்து தேம்பித் தேம்பி அழுகிருள். காமாட்சி இதைக் கண்டு பிரமித்துச் சிலையாய்ச் சமைந்து விடுகிருள்.)

---

## காட்சி 17.

---

**இடம் :** வீதி. **காலம் :** மாலை

**பாத்திரங்கள் :** ஜம்பு, பாலசுந்தரம்.

[ஜம்பு கையில் கலியாணப் பத்திரிகை யோடு வருகிறான்; எதிரே வேகமாக பாலு வருகிறான்.]

**ஜம்பு :** ஹலோ மிஸ்டர் பாலு! குட் ஈவினிங்! குட் ஈவினிங்! ஊம்......எங்கே இந்நேரத்திலே இந்தப் பக்கம். இவ்வளவு அவசரமா......?

**பாலு :** அவசரம் ஒன்றுமில்லை; ஒரு நண்பரைப் பார்க்க வேண்டும், அதற்காகத்தான்......இப்படி......

**ஜம்பு :** சரி, இப்பொழுது உன்னைச் சந்தித்ததும் ஒரு வகைக்கு நன்மைதான். இல்லை என்றாலும் நானே உன் வீட்டுக்கு வரவேண்டு மென்றுதான் இருந்தேன்.

**பாலு :** அப்படி என்ன முக்யமான காரியம்?

**ஜம்பு :** நம்ம திவான்பகதூர் பொன்னம்பலம் பிள்ளை இருக்கிறாரல்லவா? அவருக்கு நாளைக்குக் கல்யாணம்-அதற்கு இன்விட்டேஷன் கொடுக்கத்தான் வர வேண்டுமென்று இருந்தேன்.

**பாலு :** அவர் எனக்கு அவ்வளவாகப் பரிச்சயமில்லையே!

**ஜம்பு :** நான் இருக்கும்போது அவர் பரிச்சயமில்லா விட்டால் என்ன? எல்லாம் நம்ம தர்பார்தான் (ஒரு பத்திரிகையை எடுத்து அட்ரஸ் எழுதிக்கொடுக்கிறான்) இந்தா அவசியம் வந்துவிடவேண்டும். நம்ம

பிரண்ஸுகளுக்காகவே டின்னரெல்லாம் ஸ்பெஷ லாக ஏற்பாடு செய்திருக்கிறேன்.

**பாலு :** (பத்திரிகையை வாங்கிப் படித்துவிட்டு ஆச்சரியத் தோடு) என்ன! பெண் யார்? லீலாவா?

**ஐம்பு :** ஆமாம்! நடராஜன் சிஸ்டர் நம்முடன் படித்துக் கொண்டிருக்க வில்லையா? அடடே! நான்கூட மறந்து விட்டேனே, உனக்கும் அவளுக்கும் கூட முன்னே கொஞ்சநாள்...ரொம்ப......

**பாலு :** ஊஹூம். அப்படி யெல்லாம் ஒன்றுமில்லை. அதெல்லாம் அந்தக் காலம். இப்போது அதைப்பற்றிப் பேசி என்ன பயன்?

**ஐம்பு :** ஆமாம்; இந்தக் காலத்தில் யாரைத்தான் நம்ப முடிகிறது? எல்லாம் பணத்தில்தான் இருக்கிறது. எவ்வளவு அன்யோன்யம், எவ்வளவு தூரம் நீ நம்பி யிருப்பாய்? என்ன இருந்தாலும், லீலா உன்னை இப்படி மோசம் செய்திருக்கவே கூடாது. என்ன செய்வது, பணம் பாதாளம் மட்டும் பாயுமல்லவா?

**பாலு :** இதெல்லாம் உலகத்தில் சகஜம். சரி, நேரமாய் விட்டது நான் வரட்டுமா?

(பதிலை எதிர்பார்க்காமலே போய் விடுகிறான்.)

**ஐம்பு :** (பரிகாசத்துடன் சிரித்து) மடையன்! சகஜமாம் சகஜம், "சீச்சி! இந்தப் பழம் புளிக்கும்" என்ற கதைபோல் இருக்கிறது; காதலாம் கத்தரிக்காயாம். இதெல்லாம் இந்த ஜம்புவிடமா பலிக்கும்? நாளை அவள் திவான்பகதூர் மனைவி; அடுத்தநாள் என் காதலி. இதுதானா பிரமாதம்?

(போகிறான்.)

## காட்சி 18.

---

**இடம் :** தோட்டம் **காலம் :** இரவு

**பாத்திரங்கள் :** பாலு, லீலா.

[பாலு பரபரப்புடன் சுற்றிப் பார்த்தபடி உட்கார்ந்திருக்கிருன்.]

**பாலு :** இதென்ன நாடகம்? எனக்கு ஒன்றும் விளங்க வில்லையே! இவன் சொன்னதெல்லாம் உண்மைதானு? அல்லது என் மனப்பிரேமையா? பத்திரிகை அடித் தாகிவிட்டது. நாளைக்குக் கல்யாணம், இவ்வளவும் ......லீலாவின் சம்மதமில்லாமலா நடந்திருக்கும்? (சற்று யோசித்து) ஏன் இருக்காது? இருக்கும்! இருக்கும்! பெண்களின் குணமே மதில் மேல் பூனை தானே? அப்படி அவள் சம்மதமில்லாமல் இந்தக் கல்யாண ஏற்பாடுகள் நடப்பதாயிருந்தால் இன்று மாலை இங்கு வந்து அவசியம் சந்திப்பதாகச் சொல் லிப்போன அவள், ஏன் இதுவரை என்னைச் சந்திக் காமல் இருக்க வேண்டும்? அடி சண்டாளி! துரோகி! என்னென்ன காதல் கதைகளெல்லாம் பேசி என்னை ஏமாற்றி வந்தாய்! "என் உடலிலிருந்து உயிர் பிரிக்கப்பட்டாலொழிய என்னை உங்களிடத் திலிருந்து யாராலும் பிரிக்க முடியாது" என்றுகூடச் சொன்னுயே, அதெல்லாம் என்னை மயக்கத்தானே? (நீண்ட பெரு மூச்சுவிட்டு எழுந்து நாற்புறமும் பார்த்து) ஒருக்கால் நெடு நாட்களாகவே எங்கள் நட்பில் பொருமை கொண்ட அயோக்யனை ஐம்புவின் கபட நாடகமாய் இருக்குமோ? இருக்கலாம். பல நாள் என்னுடன் சேர்ந்து

பழகிய பரிசுத்த உள்ளமுடைய லீலாவா இப்படிச் செய்வாள்? ஒருக்காலும் அப்படியிருக்க முடியாது. இதில் ஏதோ சூது நடந்திருக்கத்தான் வேண்டும். (மறுபடியும் யோசனையில் ஆழ்ந்து அமருகிறான்; சுற்றிலுங் கவனித்துக் கடியாரத்தைப் பார்த்து) மணியும் ஒன்பதுக்குமேல் ஆகி விட்டதே! இனிமேலா அவள் வரப்போகிறாள்? இத்தனை நாளாக, அதிலும் இந்த ஏற்பாட்டுக்குப் பிறகும் கூட அவள் என்னைச் சந்திக்காமலும் இந்தக் காரியத்தைத் தெரியப்படுத்தாமலும் இருப்பதிலிருந்தே அவள் என்னைக் கண்டிப்பாய் நிராகரித்து விட்டாள் என்பது தெரிகிறதல்லவா? ஆம் அவள் என்னை வஞ்சித்து விட்டாள். சந்தேகமே இல்லை. இருக்கட்டும் எங்கள் வாழ்க்கையில் முடிவு என்ன என்பதைத் தீர்மானிக்க இடையில் இருப்பது, ஒரே ஒரு இரவுதானே? அதையும் பார்த்துவிடுகிறேன்.

(சுற்றிச் சுற்றிப் பார்த்தபடி கடிதத்தை எழுதிக் கேணி உருளை உத்திரச் சாரளத்தில் வைத்துவிட்டுப் போகிறான்.)

(லீலா வருகிறாள்.)

**லீலா :** (சற்று நேரத்தில் பதைபதைப்போடு திரும்பித் திரும்பிப் பார்த்தபடி பயத்துடன் பாலு—பாலு— என்று அழைத்துக்கொண்டே வந்து) எங்கே? காணவில்லையே! ஒருக்கால் வந்து பார்த்து விட்டுப் போயிருப்பாரோ? ஆமாம் அப்படித்தான் இருக்கும். எதற்கும் வழக்கமாய்க் கடிதம் எழுதிவைக்கும் இடத்தைப் பார்ப்போம். (பாலு வைத்துப்போன கடிதத்தை எடுத்து நடுக்கத்துடன் படிக்கிறாள்.)

உண்மையை உணர்ந்தேன். உன் இஷ்டப்படி செய். எல்லாம் பணத்தில்தான் இருக்கிறது. என்பதை இப்போது உன்னால் தெரிந்து

கொண்டேன். நான் ஏழை. நீ என்னை மறந்தது இயற்கையே. நான் இதற்குத் தடையாக இருப்பேன் என்று எண்ணுதே. யாவும் விதியின் திருவிளையாடல், இக்கடிதம் உன் கைக்குக் கிடைக்குமோ கிடைக்காதோ. என் கடமையை நான் செய்துவிட்டேன். என்னை மறந்துவிடு. ஆனால்! உன்னால் நான் வஞ்சிக்கப் பட்டேன் என்பது மட்டும் ஞாபக மிருக்கட்டும்! வருகிறேன்.

வந்தனம்,

பாலு

(கடிதத்தைப்படித்து பிரமித்து நின்றுவிடுகிருள். கண்ணீர் பெருகுகிறது. பீறிட்டு வரும் அழுகையையும் 'ஆத்திரத்தையும் துணியை வாயில் வைத்து அடக்கிக்கொண்டு சோர்ந்து வீழ்ந்து மெள்ளத் தடுமாறிக் கொண்டே எழுந்து)

என் அன்பே! இந்த உலகில் என்னை நேசிக்கும் உள்ளம் படைத்தவர் இருவர். ஒருவர் என் அண்ணன், மற்ருெருவர், நீங்கள். அவர் அயல்நாடு சென்று விட்டார். நம்பிப் பயனில்லை. நம்பியிருந்த தாங்களும் உண்மையறியாமல் என்னைக் கைவிட்டு விட்டீர்கள். இனி எனக்குப் புகலிடம் எதுவுமில்லை. விடிந்தால் வேருெரு கிழட்டு மிருகத்திற்கு இறையாக்கப்படுவேன். வேண்டாம் வேண்டாம். அதைவிட எனக்கு இனியது சாவு! முன்பு எங்கள் காதலை வரவேற்றதும் வளர்த்ததும் இந்தக் கிணறுதான். இப்போது என் சாதலை வரவேற்பதும் இந்தக் கிணறுதான். ஆமாம் ஆமாம். இந்த உலகில் எனக்குப் புகலிடம் வேறு எங்குமே இல்லை. இந்தக் கிணறுதான். (பைத்தியம் போல் அலறிக்கொண்டு கேணியில் விழப்போகிருள்; இடி முழக்

*கம் போன்ற கம்பீரமான குரல் ஒன்று கேட்கிறது. திகைத்து நிற்கிருள். பின்வரும் பாடல் அவள் சோக வேகத்தையும் தடுத்து நிறுத்துகிறது.)*

*(தோட்டத்திற்கு வெளியே சாது ஒருவர் பாடிக் கொண்டு போகிருர்)*

*(சாதுவின் பாட்டு)*

*(கஜல்)*

அகிலங்கள் அனைத்தும் அதனுள்
ஆழ்ந்திடும் பொருள் அனைத்தும்
ஆக்கவும் அழிக்கவும் வல்லான் நம்மை
ஆண்டவன் ஒருவன் அல்லால்.

*(பாட்டு)* *(ஆடும் சிதம்பரமாம்)*

மாண்டார் மீண்டதுண்டோ இந்த
வையகத்தே உழல் பொய்யுடல் நீத்தே—(மா)

*(கஜல்)*

ஜீவன் ஒவ்வொன்றும் மகா
தேவனின் அம்ஸமே ஆகும்
ஜீவனுக் கின்னல் செய்வோர்
யாவரும் பாவியே ஆகும்.

*(பாட்டு)* *(க்யாக்கருணத்தே)*

உடலழிந்தாலும் உயிர்தான் செய்வினைக்கு
உரியதாகும் அதனல் மனமே
மடமையினல் துன்பக் கடலிடை வீழ்ந்தே
மடிந்துபோகும் முன்னமே உணர்மனமே—

*(பாட்டைக் கேட்ட லீலா கிணற்றை விட்டுத் திரும்பி, தனக்குள்)*

**லீலா :** *ஆம், ஆம்! நான் ஏன் இறக்கவேண்டும்? இது என்ன மதியீனம்! கோழைத்தனம் அல்லவா இது? மன உறுதியோடு நான் மறுத்தால்? ஆம்! என் உயிர் பாலுவை விட்டு நான் பிரியேன். பார்ப்போம் திவான்பகதூரின் திருமணத்தை.*

*(போகிருள்.)*

## காட்சி 19.

---

**இடம் :** *வீதி* **காலம் :** *காலை*

**பாத்திரங்கள் :** *முனியாண்டி, வேலையாள்.*

[முனியாண்டி பொடியை உறிஞ்சிக்கொண்டே வருகிறான். எதிரே திவான்பகதூரின் வேலையாள் வேகமாக வருகிறான்.]

**முனி :** *மகமாயி, அடே! தம்பி, எங்கேப்பா இவ்வளவு அவசரமாப்போறே? பொண்ணழைக்க கார் போயிடுச்சா?*

**வேலை ஆள் :** *பொண்ணழைக்கப் போரதுக்குத்தான் பொறப்புட்டாங்க, காரு மக்கார்ப்பண்ணுது. இப்பத் தான் எல்லாருமாச் சேர்ந்து காரைத் தள்ளிக்கிட்டு இருக்காங்க.*

**முனி :** *அடடே! நேரமாச்சே, அடெ ரெண்டு மாட்டெக் கட்டியாச்சும் இழுத்துக்கிட்டுப் போகச்சொல்றது தானேப்பா! ம்,......எஜமான் என்ன செய்யுறாரு?*

**வேலையாள் :** *எஜமான் சிங்காரம் பண்ணிக்கிட்டிருக்காரு. உங்களெத்தாங் காணோம்னு சத்தம் போட்டுகிட்டிருந்தாரு; சீக்கிரம் போங்க...............ம்............ பூசாரி ஐயா! இந்த......நரைமுடி கருக்குந் தைலம் எங்கே கிடைக்கும்?*

**முனி :** *யாருக்கு, எஜமானுக்கா?*

**வேலையாள் :** *பின்னே எனக்கா?*

**முனி :** அடடே! அது இப்பக் கிடைக்கிறது கூடக் கஷ்டமாச்சே!.........அந்த ஷாப்புக்கடைகளிலே விசாரிச்சுப்பாரு, கிடைக்காட்டி இருக்கவே இருக்கு வண்டிமை, நாம் பாத்துக்கிறேன்; நீ சீக்கிரமா வந்திரு.

**வேலையாள் :** ஆவட்டும்; நீங்க போங்க.

(போகிறார்கள்)

---

## காட்சி 20

---

**இடம் :** திவான் பகதூர் மாளிகை **காலம் :** காலை

**பாத்திரங்கள் :** திவான்பகதூர், முனியாண்டி, வேலையாள்.
(பொன்னம்பலம் பிள்ளை உடை உடுத்திச் சிங்காரித்துக்கொண்டிருக்கிறார்; ஏவலாளர்கள் அணிவித்துக் கொண்டிருக்கிறார்கள். முனியாண்டி அங்கு வருகிறான்.)

**முனி :** மகமாயி!...

**பொன் :** என்ன முனியாண்டி! எல்லா ஏற்பாடுகளும் ஆகிவிட்டதா? இதோ பார்! மாப்பிள்ளைக் கோலத்தில் நான் எல்லாவற்றையும் கவனித்துக் கொண்டிருக்க முடியாது. நீ தான் கவனித்துக் கொள்ளவேண்டும். ஐயர் வந்துவிட்டாரா? ஏன் அதற்குள் மேளத்தை நிறுத்திவிட்டான்? வாசித்துக் களைத்துவிட்டானோ? வாசித்துச் சொல்லப்பா.

**முனி :** (உள்பக்கம் பார்த்து அதிகாரமாக) அட்ளளவே...மேளத்தை வாசிங்கய்யா.

**ஒரு ஆள் :** மேளம் பொண்ணழைக்கப் போயிருக்குங்க.

**பொன் :** ஏப்பா முனியாண்டி! மேளம் ஒரு செட்டுக்குத் தான் சொன்னியா?

**முனி :** இல்லேயே. அடுத்த மேளம் இட்ப வந்துடும். ஐயர் வந்து தயாரா இருக்கிருரு. பொண்ணழைக்க அப்பவே கார் அனுப்பியாச்சு. பொண்ணு வந்ததும் திருப்பூட்ட வேண்டியதுதான். நீங்க ஒண்ணுங் கவலெப்படாதிங்க, இந்தக் கலியாணம் ஒங்கக் கலியாணமே இல்லே. எங்கல்யாணம்.

**பொன் :** ஊம்! சீக்கிரம் போ! முகூர்த்த நேரம் நெருங்கி விட்டது. நீ போனுல்தான் இதெல்லாம் சீக்கிரம் நடக்கும்.

**முனி :** ஆஹா! இதோ ஒரு நொடியிலே வர்ரேன்.

(புறப்படத் திரும்புகிருன்.)

**பொன் :** முனியாண்டி! அங்கே கல்யாணக் கூடத்தில் யார் யார் இருக்கிருர்கள், பார்த்தாயா? பெரிய மனிதர்கள் எல்லாம் வருவார்கள், எல்லோரையும் மரியாதையாய் வரவேற்று சந்தனம் தாம்பூலம் கொடுக்க நல்ல ஆட்களாக......

**முனி :** அதெல்லாம் கவனிச்சிக்க கணக்கப்புள்ளே அங்கே யிருக்கிருருங்க! ஒங்களுக்கு அந்தக் கவலேயே வேண்டாம். நீங்க சுருக்கா அலங்காரத்தை முடிச்சிக்கிட்டு வாங்க; அதுக்குள்ளே நான் போயிப் பொண்ணெக் கூட்டியாரேன்.

(முனியாண்டி போகிருன்)

**பொன் :** (வேலேயாள் ஒருவன் கண்ணுடியைப் பிடித்துக் கொண்டு நிற்கிருன். பொன்னம்பலம் தன்னேக் கண்ணுடியில் பார்த்து மீசையை முறுக்கிக்கொண்டு விரைப்பாக நிமிர்ந்து வேலேயாளேப் பார்த்துக் கேட்கிருர்.) என்னடா! எப்படி இருக்கிறது? எல்லாம் சரியாய் இருக்கிறதா?

**வேலை ஆள் :** சாக்ஷாத் இருபது வயது வாலிபன் மாதிரி இருக்குங்க!

**பொன் :** மடையன்! என்னைப் பார்த்துக் கிழவனென்று சொன்னான்.

**வேலையாள் :** என்ன; ஒங்களெப்பாத்தா அப்படிச் சொன்னான்? அவன் யாருங்க பயித்தியக்காரன்?

**பொன் :** அவன் தாண்டா. அந்தக் காலிப்பயல் நடராஜன் (தனிமொழி) அடே நடராஜா! நான் யார் என்பது இன்னும் கொஞ்ச நாழியில் தெரியும். இன்று உன் தங்கை திவான்பகதூர் பொன்னம்பலம் பிள்ளையின் மனைவி ஆகப்போகிறாள். இப்போது உன் சபதம் என்ன ஆயிற்று? அயோக்ய நாயே! (அங்கவஸ்திரத்தை அலக்ஷியமாகத் தூக்கிப் போட்டபடி ராஜ நடை நடந்து செல்லுகிறார்.)

---

## காட்சி 21.

---

**இடம் :** நடராஜன் வீடு. **காலம்:** காலை

**பாத்திரங்கள் :** காமாட்சி, லீலா.

[ஆடைகள் ஆபரணங்கள் எல்லாம் அலங்கோலமாய்க் கிடக்கின்றன. லீலா அழுத வண்ணமிருக்கிறாள். காமாட்சி கையில் கலியாணப் புடவை நகைகளை வைத்துக் கொண்டு நிற்கிறாள்.]

**காமா :** ஏண்டி! நான் சொல்றது காதிலே கேக்கலையா? காரு வந்து ஒருமணி நேரமாக் காத்துக்கிட்டு இருக்கு. முகூர்த்த நேரம் நெருங்கிப் போச்சி. வந்த மனுசாளெல்லாம் காத்துக்கிட்டு இருக்காங்க இன்னு, நான்

அப்பவேபுடிச்சி சொல்லிக்கிட்டே இருக்கேன். நீ பாட்டுக்குக் கல்லுப்பிள்ளையாரு மாதிரி உக்காந்துக்கிட்டு அசையமாட்டேங்கிறியே! இது தேவலாமா?

**லீலா :** நீ என்னை, என்னதான் அம்மா செய்யச் சொல்லுகிறாய்? நீ என்ன சொன்னாலும் சரி; நான் கண்டிப்பாய் வர முடியாது.

**காமா :** என் கண்ணுல்லே. நீ, அப்படியெல்லாஞ் சொல்லலாமா? பொண்ணழைக்க வந்தவங்க எல்லாம் எவ்வளவு நாழியா வெளியே காத்துக்கிட்டு இருக்காங்க. நீ இப்படி மொரண்டு பண்ணினா அவுங்கள்ளாம் என்ன நெனைப்பாங்க? ஆனது ஆயிப் போச்சி. இன்னமே அதெல்லாம் நெனைக்கலாமா? நான் சொல்றதக் கேளம்மா? உம், இந்தா! இதெல்லாம் போட்டுக்கொண்டு சீக்கிரமா......

[என்று சொல்லிக்கொண்டே நகையைக் கழுத்தில் போடப் போகிறாள். *லீலா* உதறித் தள்ளிவிடுகிறாள்.]

**லீலா :** இந்தா அலங்கார மெல்லாம் வேண்டா மென்றால் விட்டு விடேன். என்னை ஏன் இப்படி இம்சிக்கிறாய்?

**காமா :** நானா இம்சிக்கிறேன். ஏண்டி! நகை போட்டுக்கிறதும் பொடவை கட்டிக்கிறதுமா உனக்கு இம்சையாயிருக்கு?

**லீலா :** உனக்கு இம்சை இல்லை; எனக்கு இம்சையாய் இருக்கிறது. இதைவிட நான் இறந்து விடுவதே மேல்.

**காமா :** கல்யாணத்துக்குப் பயந்து உயிரை விட்டவ ஒலகத்திலே ரொம்பப்பேருடி யம்மா ரொம்பப்பேரு! அடியே வேண்டாம். ஊருலே நாலு பேருக்கு, மதிப்பா பெரிய மனுஷென்னு இருக்கிற அவெம்

பேரு வீணுக் கெட்டுப் போயிடும். எல்லா ஏற்பாடும் ஆனதுக்கு அப்பறம் இந்தக் கல்யாணம் நின்னு போனு! அது நமக்குங் கேவலம். நம்ம சாதியிலே ஒரு தரம் ஒரு மாப்பிள்ளேக்கு நிச்சயமான பொண்ணெ வேறே ஒருத்தரும் எடுக்கவும் மாட்டாங்க; இதெல்லாம் யோசனெ பண்ணுமே நீ பாட்டுக்கு சின்னப் புள்ளேத்தனமா.........

லீலா : யாருடைய கேவலத்தைப் பற்றியும் எனக்குக் கவலே யில்லே! இந்தச் சம்மந்தத்தையோ அல்லது இன்னொரு சம்மந்தத்தையோ நான் விரும்பவுமில்லே. இதைவிட நான் கன்னியாகவே இருப்பது போதும் உனக்குக் கோடி புண்ணியம் உண்டு, என்னே வீணுகத் தொந்தரவு செய்யாதே.

காமா : ஊஹூம், அவ்வளவு தூரம் ஆயிடுச்சா! ஒன்னெச் சொல்லக் குத்தமில்லேடி, ஒன்னெச் சொல்லக் குத்தமில்லே. ஒன்னெ இந்த—இந்த—இந்த (வயிற்றில் அடித்துக் கொள்ளுகிருள்) வயிற்றில் பத்து மாசம் செமந்து பெத்தேன்பாரு, அதுக்குப் பலன் இது. இதை அவன் கேட்டா இந்த ஊரிலேயே குடி வைக்க மாட்டான். தொலேச்சேப்புடுவான்; இந்த மானக்கேட்டைப் பொறுத்துக்கிட்டு என் உயிரை வச்சிக்கிட்டு அரநாளிகூட இருக்கமாட்டேன். ஒன் இஷ்டப்படி செய். இந்தா ஒரு நிமிஷத்திலே என் உயிரெ மடிச்சிக்கிறேன்.

(கையிலிருந்த எல்லாவற்றையும் வீசி யெறிந்து விட்டுக் கொல்லேப்புறம் ஓடிக் கேணியில் குதிக்க முயற்சிக்கிருள்; லீலா பீதியடைகிருள்.)

லீலா : ஐயோ! அம்மா, வேண்டாம் வேண்டாம்........... (கத்திக் கொண்டே பின் தொடர்ந்து போய்ப்

*பிடித்துக் கொள்ளுகிறாள். இந்தக் கூச்சலைக்கேட்டு வெளியில் பெண் அழைக்க வந்திருந்த யாவரும் ஓடிவந்து கூடி விடுகிறார்கள்.)*

**கூட்டத்தில் ஒருவர் :** *இதென்ன வேடிக்கை! என்ன நடந்தது? கார் காத்துக்கிட்டிருக்கு; இன்னும் சிங்காரிக்கலையா?*

**காமா :** *(தலையில் மட மடவென்று அடித்துக்கொண்டு) இது என் தலைவிதி! தலைவிதி! தலைவிதி! இவ்வளவு ஏற்பாடும் ஆனபிறகு பெண்ணுக்கு இஷ்டமில்லையாம்! இந்த வயிற்றெரிச்சலை நான் யாரிடத்தில் சொல்லி அழுவது? (முகத்தில் துணியை வைத்துக் கொண்டு அழுகிறாள்.)*

**ஒரு பெண் :** *(லீலாவிடம்) ஏம்மா! இஷ்டமில்லேன்னு முன்னாலேயே சொல்லி யிருக்கப்படாதா?*

**மற்றொரு பெண் :** *பாவம், சின்னப் பொண்ணு, மனசு கேக்கவாண்டாமா?*

**கிழவி :** *தாயார் சொல்றதைக் கேளம்மா. பெத்த தாய் ஒனக்குக் கெடுதல் பண்ண நினைப்பாளா? அவுங்க அவுங்களுக்குக் குடுத்து வச்சதுதானே கெடைக்கும். கோட்டையிலே பொறந்தாலும் போட்ட புள்ளி தவறுமா?*

**பெரியவர் :** *உம், உம், சீக்கிரம் புடவையை உடுத்தி அழைச்சிக்கிட்டு வாங்க. கொழந்தப் பொண்ணு. அதுக்கிட்டே எதமாச் சொல்லாமே மொரட்டுத்தனம் பண்ணினா சரிப்படுமா? இந்தா! பங்கஜம், தலையை வாரிப் பொட்டுவச்சு உம். ம். ஆகட்டும்...*

**பங்கஜம் :** *சீப்பு எங்கேம்மா? வாம்மா - வா. நல்லாப் படிச்சவளாச்சே நீ.*

**ஒரு பெண் :** அதனாலேதானே இவ்வளவு கெடுதலும் வந்தது.

**பங்கஜம் :** ஏம்மா, நீ சும்மா இருக்கமாட்டே?

**கிழவி :** சொந்த மாமா; ஊருக்கே பெரியவரு; அறுபது வயசானாலும் ஆம்பிளைக்கு என்ன? ராஜாங்கமா கார்லே போக வர, நகை நட்டுப்போட,.........ம், ம். பூவை வையடி.........ம். சரி புறப்படும்மா. (காமாட்சியிடம்) ம், ம். காமாட்சி! எழுந்திரும்மா. நீ வேறே சின்னப் பிள்ளையாட்டம் அழுதுக்கிட்டு, ம். ம், வா. வா.

(ஆளுக்கொரு பக்கமாய்ப் பேசுவதைக்கண்டு லீலாவின் உடல் குன்றிவிடுகிறது. உணர்ச்சி யற்ற பதுமை போல் போகிறாள்.)

## காட்சி 22.

**இடம் :** திருமண மண்டபம். **காலம் :** காலை

(புரோகிதர்கள் மந்திரம் சொல்லிக்கொண்டிருக் கிறார்கள். மேளவாத்தியம் முழங்குகிறது சிலர் வந்தவர்களை வரவேற்று, சந்தனம் தாம்பூலம் கொடுக்கின்றார்கள். ஐயர் சொற்படி பெண்ணும் மாப்பிள்ளையும் அரசாணியைச் சுற்றி வருகிறார் கள். பெண் மயங்கிக் கீழே விழுகிறாள், சிலர் தண்ணீர் தண்ணீர் என்றும், சிலர் தூக்குங்கள் தூக்குங்கள் என்றும் பல விதமாகப் பேசிக் கொள்ளுகிறார்கள். இதற்கிடையில் கூட்டத்தை விலக்கிக்கொண்டு வந்த ஜம்பு, பொன்னம்பலம் பிள்ளையையும் புரோகிதரையும் இடித்து ஜாடை காண்பித்துக் கழுத்தில் தாலியைக் கட்டச் செய்கிறான்.)

## காட்சி 23.

---

இடம் : பாலு வீடு (ஒரு தனி அறை) காலம் : மாலை

[திரைக்குப்பின் மேளவாத்தியம் ஒலிக்கிறது.]

பாலு : (பாலு லீலாவின் படம் ஒன்றைக் கையில் வைத்துக்கொண்டு வருத்தத்துடன்) லீலா லீலா! நீயா என்னை இப்படி மோசம் செய்ய வேண்டும்? நீ இப்படி நடந்து கொள்வாயென்று நான் கனவிலும் நினைத்ததில்லையே. ஒரு நாள் பார்க்காவிட்டால் உயிரையே விட்டுவிடுவேனென்று என்னிடத்தில் சொன்ன லீலா தானே நீ? இப்போது என்னைப் பார்த்து எத்தனை நாளாயிற்று? நீ இறந்தா போய் விட்டாய்? இல்லையே! வேறொரு கணவனோடு வாழ்க்கை நடத்துகிறாய். பிடித்ததுதான் பிடித்தாயே, ஒரு வாலிபனைப் பார்த்துப் பிடித்திருக்கக் கூடாதா? கிழவனானாலும் பணம் இருந்தால் போதுமென்ற எண்ணமா? இப்பொழுது தெரிகிறது! நீ ஆடிய காதல் நாடகங்களும் காதல் பேச்சுக்களும் என்னை மயக்கத்தான் என்று. காதலாம் காதல்! எல்லாம் பொய்; வெறும் வெளிப்பகட்டு; படத்தை விரித்தாடும் விஷப்பாம்பு போன்ற உன்னை நம்பினேன். உன் பேச்சில் மயங்கினேன்; நல்ல பாடம் கற்பித்தாய்! இனிமேலென்ன? நீ ஒரு திவான் பகதூரின் மனைவி! இனி என்னைப்பற்றி உனக்கென்ன கவலை? உலகம் பணத்தில் இருக்கிறது. பணமுள்ளவன் விரும்பிய பொருளையெல்லாம் அடைய முடியுமென்று கேட்டது உண்டு; ஆனால் காதலும் விற்கக்கூடியது. மார்க்கட்டில் அதற்குக்கூட விலை உண்டு என்பதை இன்றுதான் உன்னிடத்திலிருந்து

தெரிந்துகொண்டேன். லீலா! நீ என்னை வஞ்சித்தாய். போகட்டும், நீயாவது சுகபோகத்தில் அந்த இளங் காதலனோடு இன்புற்று இரு. இரு. இரு.—கெட்டுப்போன உலகம்.

(தலையிலடித்துக் கொள்ளுகிறான்)

---

## காட்சி 24.

---

இடம் : திவான்பகதூர் மாளிகை காலம் : இரவு

(சாந்திமுகூர்த்த அறை)

**பாத்திரங்கள்;** திவான்பகதூர், லீலா.

[அழுது கொண்டிருந்த லீலா கண்களைத் துடைத்துக் கொண்டு தலை முடியை அலங்கோலம் செய்து கொண்டு கண்ணாடிக்கு முன் நின்று பைத்தியம் போலச் சிரிக்கிறாள்.]

**லீலா :** (தனக்குள்) ஆமாம். இதுதான் நல்ல யோசனை! வேஷம் நன்றாகவேயிருக்கிறது. ஆனால் யுக்தி பலிக்க வேண்டும். லீலா! உன் கற்பைக் காப்பாற்றிக்கொள்ள வேண்டிய பொறுப்பு உன் கையில்தான் இருக்கிறது. இதுதான் கடைசிக் கண்டம். இதில் நீ தோல்வி அடைந்தாயோ, அவ்வளவுதான்! உன் எதிர்கால மனக்கோட்டை யாவும் இடிந்து தகர்ந்துவிடும், ஜாக்கிரதை! (சிறிது மௌனம்) வெட்கக்கேடுதான். என்ன செய்வது? நாய் வேஷம் போட்டால் குரைத்துத்தானே ஆகவேண்டும்? (யாரோ வருகிற சப்தம் கேட்கிறது) அதோ அந்தக் கிழட்டுச் சனியன்தான் வருகிறது போலிருக்கிறது, வரட்டும்.

(ஓடிப்போய்த் தலையணைமேல் முகத்தைவைத்துத் தலைவிரிகோலமாய்க் கிடக்கிறாள்.)

**பொன் :** (திவான்பகதூர் ஆடம்பரமான ஆடை ஆபரணங் களுடன் பிரவேசிக்கிறார்.) ஆஹா, இன்று தான் நான் ஜென்மம் எடுத்ததின் பயனை அடையப்போகி றேன். இன்று தான் நான் திவான்பகதூர். அடே நடராஜா - அன்று என்னடா சொன்னாய்? இந்த உட லில் உயிர் இருக்கும் வரை நீர் லீலாவை மணப்பது முடியாது! (பேரொலிச் சிரிப்பு) முடியாதென்பது யாருக்கடா? உன்னைப்போன்ற கையாலாகாத, விதி யில்லாத, கதியில்லாத பிச்சைக்கார நாய்களுக்கல் லவா? எனக்கா? (மறுபடியும் சிரிப்பு) என் இன்பக் கிளி எனக்காகக் காத்திருப்பாள். மதுரத் தேனைப் பருகிக் காம சுகானுபவக் களிபேருவகையடைய இதோ போகிறேன். (மூக்குக் கண்ணாடி, ஆடை அணிகள் எல்லாம் சரி செய்துகொண்டு அடிமேல் அடி வைத்து ராஜ நடை நடந்து, லீலாவை நெருங்கி அவள் அலங் கோலமாகப் படுத்திருப்பதைக் கண்டு, திடுக்கிட்டு, ஓடி அருகில் அமர்ந்து) லீலா! லீலா! இதோ பார்! என்னைப் பாரேன்! ஏன் இப்படிப் படுத்திருக்கிறாய்? இங்கு யாராவது உன்னை எதுவும் சொன்னார்களா? அல்லது......உடம்புக்கு ஏதாவது (மெள்ளத் தொட்டுப் புரட்ட எத்தனித்தபடி) இப்படித் திரும்பி என்னைப் பாரேன்! நான் கூப்பிடுவது உனக்குத் தெரியவில்லை?

(லீலா, பற்களை நற நறவென்று கடித்துக்கொண்டு கண்களை மிரள மிரள விழித்துப் பயங்கரமான சப்தத்துடன் கழுத்தைப் பிடித்து நெரிக்கப் போகி றாள். திவான் பகதூர் இதைக் கண்டு பயப்படு கிறார்.)

**லீலா :** டேய்......ஊம்......என்னை யாரென்று நினைத் துக் கொண்டாய்? நான் இருக்கும் இடத்தில் இன்

ணொரு பெண் வந்து இருக்க நான் விடுவேனு? ஊம்... அவ்வளவு தைரியமா உனக்கு? டேய்...

(பெரிய சப்தத்துடன் பேய் போல் ஆடுகிருள்)

**பொன்;** (நடுக்கத்துடன்) ஐயய்யோ!......பேயா பிடித்திருக்கிறது!

**லீலா:** டேய்...... நீ இந்தப் பெண்ணைத் தொட்டால் உன்னை மாறு கால் மாறு கை வாங்கிவிடுவேன் தெரியுமா?

**பொன்:** (நடுங்கிக்கொண்டே) இல்லை, இல்லை, இல்லை சத்தியமாகத் தொடவே மாட்டேன். தாயே! நீ தான் காப்பாற்றவேண்டும்.

(சாஷ்டாங்கமாக விழுந்து கும்பிடுகிருர்.)

**லீலா:** சரி, போ வெளியே, உம் சீக்கிரம் போ.

**பொன்:** போகிறேன், போகிறேன். போகிறேன்! (எழுந்து ஓடி ஒரு ஓரமாய் நின்று) தாயே! நான் போகிறேன்; நீ யாரென்று சொன்னல்......

**லீலா:** நானு? என்னையா கேட்கிருய்? உம்... டேய்... என்னைத் தெரியவில்லையா உனக்கு?...உம் நான் தான் பூவோடும் மஞ்சளோடும் இந்த வீட்டிலேயே தெய்வமாயிருந்து இது வரையிலும் உன்னைக் காப்பாத்திக் கொண்டு வரும் பூவாடைக்காரி மங்களம். நீ வெளியிலே செய்யும் அக்கிரமங்களெல்லாம் போதாதென்று வீட்டிலுமா ஆரம்பித்து விட்டாய்! அது நான் இருக்கும் வரை முடியாது. என் உடம்பெல்லாம் எரிகிறது. உம். போ. போ. வெளியே!

**பொன் :** (லீலா நெருங்குகிருள்) இதோ போகிறேன். போகிறேன், போய் விட்டேன். (ஓடி விடுகிருர்)

**லீலா :** (உடனே அறைக் கதவைத் தாளிட்டுக்கொண்டு, படுக்கையில் அயர்ந்து உட்கார்ந்து) அப்பாடி......! சனியன் தொலேந்தது; தப்பினேம் இந்தக் கண்டத்தி லிருந்து, யோசனே வெற்றிதான். இதுதான் என் கற்பைக் காப்பாற்றிக்கொள்ள நல்ல வழி! இன்னும் என்னென்ன அதிசயங்கள் நடைபெற வேண்டுமோ? என்னென்ன வேஷம் போட வேண்டிய திருக்குமோ? இருக்கட்டும் பார்ப்போம். (படுக்கையில் சாய்கிருள்)

---

## காட்சி 25.

---

**இடம் :** வீதி

**பாத்திரங்கள் :** ஐம்பு, கணபதி ஐயர்.

**ஐம்பு :** ஓய், ஓய், கணபதி ஐயர்! ஏது அதிகாலேயிலே?...

**கணபதி :** ஓ! ராத்திரி நீங்க ஆத்திலே இல்லேயோ?

**ஐம்பு :** ஏய்யா! ஏக ஆர்ப்பாட்டமோ? (சிரிப்பு)

**கணபதி :** ஆர்ப்பாட்டமா! ராத்திரி முழுக்க ஒரே களே பாரமாப் போச்சின்னு!

**ஐம்பு :** சகஜந்தானே, நாலாந்தாரமா வந்துருக்கா, எஜமா னுடைய அந்தஸ்து எப்படிப்பட்ட தென்று புதுப் பெண்ணுக்குத் தெரியவாண்டாமா? இனிமேல் கொஞ்ச நாளேக்கு அதிகாரமெல்லாம் பலமாய்த்தா னிருக்கும்.

**கணபதி :** ஆமா...! என்ன சொல்றேள். சித்தே புரியும் படியாத்தான் சொல்லுங்களேன்.

**ஜம்பு :** வேறே ஒண்ணுமில்லையா. இனிமேல் எஜமானியம்மா தயவை சம்பாதித்துக் கொண்டால்தான் நாமெல்லாம் காலம் தள்ளமுடியும்; இல்லையோ, ஆபத்துதான்.

**கணபதி :** எஜமானியம்மா தயவைச் சம்பாதிக்கிறதா! பேஷ் உயிர் பொழச்சா போதும்.

**ஜம்பு :** ஏய்யா!

**கணபதி :** எஜமானியம்மா தயவைச் சம்பாதிக்க மொதல்லே பூசாரியோட தயவு வேணும்.

**ஜம்பு :** என்னையா விஷயம்?

**கணபதி :** விஷயமா! ரராத்திரி படுக்கையறைக்குள்ளே போன எஜமான், பொழச்சது புனர் ஜென்மந்தான். போகச்சே அவர் போன ஜோரும்...அப்பா, அலறி அடிச்சிண்டு வந்தார் பாரும், ஏம்பாடு வெல வெலத்துப்போச்சு.

**ஜம்பு :** என்னையா சமாச்சாரம்?

**கணபதி :** சமாச்சாரமா! புதுஎஜமானியம்மாளை, செத்துப் போன பழைய எஜமானியம்மா பிடிச்சிருக்காளாம், பேய்......!

**ஜம்பு :** பேயா......!

**கணபதி :** ஆமா பேய்தான். பிசாசுன்னும் சொல்லலாம். பூசாரி முனியாண்டியோடதான் வீட்டுக்குள்ளே அடியெடுத்து வைக்கணும், போங்க. எஜமான் உங்களெ ரொம்ப எதிர்பார்க்கிறார். நான் முனியாண்டியை அழைச்சிண்டு வந்திடுறேன்.

(ஓடுகிறான்)

**ஜம்பு :** *( தனக்குள் ) பேய் பிடித்திருக்கிறதா! உம். கிழவனை ஏமாற்ற இதுவும் ஒரு வழியோ? பார்க்கலாம்.*

*( போகிறான் )*

---

## காட்சி 26.

---

**இடம் :** *திவான்பகதூர் மாளிகை* **காலம் :** *காலை*

**பாத்திரங்கள் :** *திவான்பகதூர், முனியாண்டி.*

*[முனியாண்டி மெழுகிக் கோலமிடப்பட்ட ஒரு இடத்தில் வாழை இலைகளைப்பரப்பி பூசைக்குரிய சாமான்களை முறைப்படி வைத்துக்கொண்டிருக்கிறான். பக்கத்தில் திவான்பகதூர் ஒரு நாற்காலியில் உட்கார்ந்து இவைகளை யெல்லாம் கவனித்துக் கொண்டிருக்கிறார்.]*

**பொன் :** *ஏம்பா முனியாண்டி! இந்த ஒரு முறையோடு இந்தப் பிசாசு தலைகாட்டாமல் ஓடிவிடுமல்லவா?*

**முனி :** *இது கெடக்குதுங்க; இதுதானா ஒரு பிரமாதம். ஏம்மேலே அந்த வேப்பமரக் கருப்பு வந்து, இந்தப் பெரம்பைக் கையிலே எடுத்தா ஆடாத பிசாசெல்லாம் வந்து ஆடும். எந்த ஏவலா இருந்தாலும் சரி, பில்லி சூனியமா இருந்தாலும் சரி பஞ்சாப் பறந்திடும். இப்பப் பாருங்களேன். கொஞ்ச நேரத்திலே வேடிக்கையை.*

**பொன் :** *ஆமாப்பா! இதனால் எவ்வளவு செலவு வந்தாலும் சரி, அதைப் பற்றிக் கவலையே இல்லை; எப்படியாவது அந்தப் பிசாசு ஒழிந்தால் போதும்.*

**முனி :** *அதெல்லாம் நான் பார்த்துக்கிறேங்க. நீங்க அம்மாவைக் கூட்டிக்கிட்டு வரச் சொல்லுங்க!*

**பொன் :** *சரி! இதோ கூட்டிவரச் சொல்லுகிறேன். அடே யாரடா அங்கே? சீக்கிரம்போய் வேலைக்காரி லெக்ஷ்மியிடம் சொல்லி லீலாவை சீக்கிரம் ஜாக்கிரதையாக அழைத்துவரச் சொல்.*

*(வேலையாள் போகிறான்)*

**முனி :** *இதெப் பத்தி நீங்க கொஞ்சங்கூட யோசிக்கவே வேண்டாம். அதெ இப்ப ஒரு நிமிசத்திலே தொலைச் சுப்புடுவேன். ஆனா எஜமான், இந்த வருசம் கருப் பையா பூசைக்கு வேண்டிய செலவெல்லாம்...........*

**பொன் :** *அது எவ்வளவானாலும் நானே கொடுக்கிறேன்; எப்படியும் இந்த......*

*(லீலாவை அழைத்துக்கொண்டு லக்ஷ்மி வருகிறாள்)*

**முனி :** *வாங்க வாங்க, இப்படி உட்கார வையுங்க. (உட்கார வைக்கிறாள். முனியாண்டி தேங்காயை உடைத்துக் கற்பூரம் காட்டி சாம்பிராணிப் புகையைக் கிளப்பிக் கையில் உடுக்கை யெடுத்து அடித்து சாமி அழைக்கிறான். முனியாண்டிமீது சாமி வந்து சீறுகிறது. லீலாவும் பேயாட ஆரம்பிக்கிறாள்.) நீ யாரம்மா? எங்கே வந்தே? ஒனக்கு என்ன வேணும்? வேண்டியதைக் கேட்டு வாங்கிக்கிட்டுப் போயிடு; இல்லேன்னா நான் என்ன பண்ணுவேன் தெரியுமில்லே? (லீலா பதிலே பேசாமல் ஆடிக்கொண்டே இருக்கிறாள்) சரி சரி நீ ஒழுங்காப் போமாட்டே! ஊம். குடுக்கவேண்டியதைக் குடுத்தாத்தான் போவே. (பிரம்பை எடுத்து உருவி வளைத்து) ஊம் என்ன சொல்றே! நீ யாருன்னு சொல்றியா இல்லேன்னா (என்று பிரம்பை ஓங்குகிறான். லீலா பேரிரைச்சல் போட்டு) டேய்! நீ தானா என்னை விரட்ட வந்தவன்? உம் என்னை விரட்ட உன்னால் முடியுமாடா? உம் என்னை யாரென்று நினைத்துக் கொண்டாய்!*

டேய்........(பிரம்பை வெடுக்கென்று பிடுங்கிக் கொண்டு பூசாரி முதல் பொன்னம்பலம் வரை எல்லோரையும் பலமாக விரட்டி அடிக்கிறாள். பூசாரி. உயிர் பிழைத்தால் போதுமென்று ஓடுகிறான். மற்றவர்களும் ஓடுகிறார்கள்.)

---

## காட்சி 27.

---

**இடம் :** இரங்கூனில் நடராஜன் இருப்பிடம். **காலம் :** காலை

[நடராஜன் பத்திரிகைகளைப் பார்த்துக் கொண்டிருக்கிறான். தபால்காரன் கடிதங்களைக் கொண்டு வந்து கொடுக்க நடராஜன் ஒரு கவரை உடைத்துப் படிக்கிறான்.]

ஷண்முகனுதபுரம்

அன்பார்ந்த அண்ணா!

தாங்கள் அம்மாளுககு எழுதிய கடிதத்தைப் பார்த்தேன். தாங்கள் செய்திருந்த எச்சரிக்கை யெல்லாம் இறந்துபோன பிணத்திற்குச் செய்த இன்ஜெக்ஷன் போல் பயனற்றுப் போய்விட்டது. உங்களைக் குறை கூறுவதாக எண்ணவேண்டாம். விதியென்று சொல்லுகிறார்களே. அதுதான் போலும் என்னைத் தினமும் கொன்று வருகிறது. தாங்கள் என்று என்னைத் தனியே விட்டுச் சென்றீர்களோ அன்றே என் எதிர்கால மனக்கோட்டைகள் யாவும் இடிந்து விழ ஆரம்பித்துவிட்டன.

அருமை அண்ணா! ஏதோ நான் பிதற்றுவதாக எண்ணவேண்டாம். தங்களையும் என்னையும் பெற்றெடுத்துப் பாலூட்டிச் சீராட்டி வளர்த்த ஒரு

ஜீவன் உண்டே! என்ன யோசிக்கிறீர்கள்? நம் தாய் தான். அவர்களின் அரும் பெரும் முயற்சியால் இன்று நான் மாமா என்று சொல்லக்கூடிய அந்த மிருக மனிதன் திவான்பகதூருக்கு வாழ்க்கைத் துணைவியாக்கப்பட்டிருக்கிறேன். தாங்கள் சென்ற மறு வாரமே எனக்குத் திருமணம் என்னும் கொடு மணம் நடத்தப்பட்டுவிட்டது. அந்த அக்ரமத்தைச் சொல்லி அழவும் ஆறுதல் கூறவும் இந்த அநீத உலகில் ஒருவருமில்லை. இருந்த தாங்களும் என்னிட மிருக்கக் கொடுத்து வைக்கவில்லை. அதுவும் என் காலம்தான். இக் கொடுமையை என்னுல் சகிக்க முடியவில்லை, இனிமேலாவது இப் பரந்த உலகில் இப்படிப்பட்ட அக்கிரமங்கள் நடவாதிருக்கும் பொருட்டு உருகியோடும் என் சரீரத்தை மண்ணில் மறைக்கத் தீர்மானித்துவிட்டேன். இருந்தாலும் என் கோழை மனம் இறப்பதற்கு முன் தங்களின் திவ்ய முகதெரிசனத்தைக் காணத் துடித்துக்கொண் டிருக்கிறது, இதுதான் என் கடைசி ஆசை.

இப்படிக்குத் தங்கள் தங்கை,

**அபாக்கியவதி, லீலா,**

நட : லீலா, லீலா! உனக்கா இக்கதி நேரிடவேண்டும்? இப்படியாகும் என்று நான் எதிர்பார்க்கவே இல்லையே! என்ன அக்ரமம்! பாபி நான்தான் இதற் குக் காரணம். உன்னை அந்தச் சண்டாளர்களிடையே விட்டு வந்தது என் தப்பிதம்தான்.................அடே அயோக்கியக் கிழட்டுப் பயலே! உன் எண்ணம் நிறைவேறிவிட்டதென்று நினைத்துக்கொண்டிருக் கிருய்? ஊம்......எங்களைப் பெற்ற தாயே பேயாகவா இருக்கவேண்டும்! இருக்கட்டும். லீலா இதோ

புறப்பட்டுவிட்டேன், கவலைப்படாதே! அடுத்த கப்பலில் பதிவு செய்யப்படும் முதல் சீட்டு என்னுடையதுதான். (விரைந்து செல்லுகிறான்)

---

## காட்சி 28.

---

இடம் : திவான்பகதூர் மாளிகை. காலம் : மாலை.

பாத்திரங்கள் : திவான்பகதூர், முனியாண்டி

ஐம்பு.

[பொன்னம்பலம் வருத்தமாக உட்கார்ந்திருக்கிறார். முனியாண்டி வருகிறான்.]

முனி : நமஸ்காரமுங்க! என்ன இப்படி ஒரு மாதிரியா இருக்குறீங்க?

பொன் : (வெறுப்போடு முறைத்துவிட்டு மறுபுறம் திரும்பிக்கொள்ளுகிறார்.)

முனி : ஏங்க? என்னைப் பார்க்கப் புடிக்கிலிங்களா? ஆமாமா ஒங்க காரியந்தான் முடிஞ்சுபோச்சே இன்னெமே இவனைப் பார்த்து என்ன பிரயோசனம்? உம், நீங்க என்னைப் பாக்காட்டிப் பரவாயில்லே. பேசினபடி பணத்தைக் கொடுத்திடுங்க!

பொன் : (கோபமாக) பணமாவது பிணமாவது, ஏதுடா பணம்! அயோக்கியப் பயலே!

முனி : என்னுங்க இப்படிச் சொல்றீங்க! எப்படியாவது கல்யாணத்தே முடிச்சுப்புட்டா ரூவா ஐநூறு தாரென்னு நீங்கதானே சொன்னீங்க!

பொன் : போதும், போதும்; நான் கல்யாணம் முடித்ததும் கட்டையிலே போனதும்; இதுவரை உன் பேச்சைக்

கேட்டு அழுததெல்லாம் போதாதென்று இன்னும் உனக்கு வேறு அழவேண்டுமா? எரிகிற வீட்டில் கிடைத்தது ஆதாயமென்று பார்க்கிறாய்? இனிமேல் ஒரு பைசாகூடக் கொடுக்கமாட்டேன். மரியாதையாய்ப் போய்விடு. தெரியுமா?

**முனி :** இங்கே பாருங்க, என்னது? காரியம் முடிஞ்சு போச்சின்னு இப்படிப் பேசுறீங்க? இதெல்லாம் நல்லால்லேங்க!

**பொன் :** டேய் யாரடா அங்கே? (ஜம்புவும் மற்றொரு வேலையாளும் வருகிறார்கள்; அவர்களிடம்) இந்த அயோக்கியப் பயலைப் பிடித்து வெளியில் தள்ளுங்கள்.

(என்று சொல்லிவிட்டு திவான்பகதூர் உள்ளே போய் விடுகிறார்.)

**ஜம்பு :** ஏய் முனியாண்டி! என்ன கலாட்டா இது?

**முனி :** ஏய்யா! நீங்க இருக்கும் போதுதானே சொன்னாரு. காரியம் முடிஞ்சதும் ரூவா ஐநூறு தாரேன்னு. இப்பக் கேட்டா, போடா வாடாப் பொட்டக் கண்ணான்னு ஓட்டுறா, அதுக்கு நானா மசிவேன்!

**ஜம்பு :** காரியம் முடிய நீ என்ன சாதித்து விட்டாய்? இவர் இல்லாவிட்டால் காரியம் முடிந்திருக்குமோ?

**முனி :** யாரு இல்லேன்னா! அது வேறே நமக்குள்ளே ஒத்துப்போற விஷயமுல்லே அது. இப்ப அவரு பணங் குடுத்தா நான் தான் என்ன, மறந்துடுவேனா? அது வழக்கப்படி உள்ள கமிஷன் உங்களுக்குக் குடுத்திடுவேன். இப்படி அடியோட ஒண்ணுமில்லேன்னா? அது நாயமாங்குறேன்?

(ஜம்பு முனியாண்டி காதில் ரகசியமாக ஏதோ சொல்கிறான்)

**முனி :** சரி சரி அப்படியா சமாச்சாரம். ஊம். நகத்துங்க. ஓகோ அதானே நானும் என்னடா சோழியங் குடுமி சும்மா ஆடாதேன்னு பார்த்தேன். அப்ப சரிங்க, மறந்திடாதிங்க; நான் வர்ரேங்க, சில்லரை...

**ஐம்பு :** ஆகட்டும் காரியம் முடியட்டும்.

**முனி :** மகமாயி ! (போகிறான்)

---

## காட்சி 29.

---

**இடம் :** நடராஜன் வீடு. **காலம் :** மாலை.

**பாத்திரங்கள் :** நடராஜன், காமாட்சி.

[காமாட்சி ஒருபலகையில் உட்கார்ந்திருக்கிறாள். நடராஜன் ஆத்திரமும், துக்க ஆவேசமும் தூண்டப்பட்டவனாய்க் கோபத்தோடு.]

**நட :** ஆம். நீதான் பெற்றாய்! வளர்த்தாய்! அதற்காக இப்படியா செய்யவேண்டும்? அம்மா! அம்மா! நீ மட்டுமா உலகத்தில் அதிசயமாக மக்களைப் பெற்று வளர்த்தாய்? உன்னைப்போல் எத்தனையோ கோடிக் கணக்கான தாய்மார்கள் மக்களைப் பெற்று வளர்க்கவில்லையா? அவர்களில் யாராவது இப்படி உன்னைப் போல் தன் மக்களை உயிரோடு பலிகொடுக்க விரும்புவார்களா? ஐயோ! இதைவிட நீ லீலாவை ஆற்றிலோ குளத்திலோ தள்ளியிருந்தால் கூடப் பரவாயில்லையே! அதைவிடக் கொடுமையல்லவா செய்திருக்கிறாய்!

**காமா :** இப்ப என்னடா ஒலகத்திலே இல்லாத கொடுமையை நான் செய்து விட்டேன்? லீலா ஒருத்திதானா அதிசயமா நாலாந்தாரமாகக் கட்டிக்கிட்டா?

இன்னம் எத்தனையோ லட்சம் பேர் இந்தமாதிரி ரெண்டாந்தாரம், மூணுந்தாரமுன்னு கல்யாணம் செய்துக்காமேயா இருக்காங்க! எல்லாம் அதது விதியப்போலத்தான் நடக்குன்னுட்டுப் போவாமே...

நட : விதி! விதி! யாருக்கு விதி? சோம்பேறிகளும், கையாலாகாதவர்களும் அல்லவா தன்னால் ஆகாத காரியங்களுக்கெல்லாம் விதி விதி யென்று சொல்லி, யானை, தலையில் தானே மண்ணை அள்ளிப் போட்டுக் கொள்வதைப் போல் தங்களைத் தாங்களே கெடுத்துக் கொள்வார்கள். அந்தோ! விதியின் பெயரைச் சொல்லி இந்நாட்டில், எத்தனை கோடிப் பேர்களைக் கெடுத்திருக்கிறார்கள்; எத்தனை கோடிப் பேர் தன்னைத்தானே கெடுத்துக்கொண்டார்கள்; அம்மா கொஞ்சம் நன்றாக யோசித்துப் பார். லீலாவை இன்று ஒரு கிழவனுக்கு மனைவியாக்கி அவள் வாழ்க்கையைப் பாழாக்கியது நீயா அல்லது விதியா? நீ விதியென்று தான் சொல்வாய்; அப்படியானால் நாளையே லீலாவுக்கு மறுமணம் செய்ய ஏற்பாடு செய்கிறேன்; அப்போது அந்த விதி என்ன செய்கிறது? அந்த விதியினால் இதைத் தடுக்க முடிகிறதா என்பதைப்பார். அதன் பிறகாவது விதியின் பெயரால் நீ எவ்வளவு பெரிய அக்ரமத்தைச் செய்து விட்டாய் என்பது தெரியும்.

காமா : இப்படி யெல்லாம் வருமுன்னு நாங்கண்டேன்? எல்லாம் உன் நன்மையை உத்தேசித்துத் தான் செய்தேன்,

நட : மறுபடியும் எனக்காகச் செய்தேனென்று சொல்லாதே; உன் அண்ணன் உறவு விட்டுப்போகக்கூடாது

என்பதற்காகக் கிளியை வளர்த்துப் பூனைக்குக் கொடுத்ததைப்போல் கொடுத்துவிட்டு, என் நன்மைக்காகச் செய்தேனென்று வேறு சொல்லுகிறாய்?

**காமா:** அதுனாலே இப்ப என்னடா கெட்டுப்போச்சு? அவள் ராஜாத்தி மாதிரி இருக்கா. அவளுக்கென்ன குறைச்சல்?

**நட:** ராஜாத்திமாதிரி இருப்பது அது இல்லை......நீ தான் இப்போது அப்படி இருக்கிறாய்......தங்கச் செயின், பட்டுப் புடவை, என்ன அலங்காரம்! என்ன ஓய்யாரம்! சே! இந்த அற்பப் பொருள்களுக்காகவா ஒரு பெண்ணைப் பலி கொடுக்க வேண்டும்? உன்னால், உன் பண ஆசையால், உன் அறியாமையால் இன்று லீலா தன் வாழ்க்கையின் சுகங்கள் எல்லாவற்றையும் இழந்து நரக வேதனைப் படுகிறாள் தெரியுமா?

**காமா:** அவள் சுகத்துக்கு ஒண்ணும் குறைச்சல் இல்லை; நீ......

**நட:** சுகமா! அடடாடா, இந்த சுகம் உன் வயிற்றில் பிறவாதிருந்தால் கிடைத்திருக்குமா?.........விஷமே உருவாகிய உன் வயிற்றில் நாங்கள் பிறந்தோமே!

**காமா:** (முகத்தில் துணியை வைத்துக் கசக்கிக்கொண்டு) ஹும்! இதெல்லாம் என்னெப் புடிச்சப் போராத காலம். நல்லதுக்குச் செய்யப்போனா என்னமோப் பெரிய கொலை பண்ணிட்டாப்போல பேசுறே! எம் புத்திக்கி இதுவும் வேணும் இன்னமும் வேணும்.

**நட:** கொலை செய்திருந்தால் கூடப் பரவாயில்லையே, அம்மா! அதைவிடப் பெரிய கொடுமையல்லவா செய்து விட்டாய். ஐயோ! பத்து மாதம் சுமந்து

வருந்திப் பெற்றுப் பாலூட்டிச் சீராட்டி வளர்த்த பச்சிளங் கன்னிகையை உயிரோடு பலியிட்டாயே அம்மா! நீயே யோசித்துப்பார்; நீ கல்யாணம் செய்து கொண்ட காலத்தில் என் தந்தை ஒரு கிழவனும் இருந்திருந்தால், உன் மனம் என்ன பாடுபட்டிருக்கும்.

அம்மா, அம்மா, அம்மா! பெண்ணாய்ப் பிறந்த உனக்கு ஒரு இளம் பெண்ணின் உணர்ச்சி தெரியாமல் போய்விட்டதே! அம்மா, ஐயோ! நினைத்தாலும் நெஞ்சம் வெடித்துவிடும் போலிருக்கிறதே! உனது தாயுள்ளத்தைப் பணப் பேய்க்கு இரையாக்கி விட்டாயே! அம்மா, ஐயோ! உனது ஹிருதயமென்ன கல்லாகி விட்டதா? தொண்டு கிழவன் உன்னருங் குமரியைத் தொட்டுத் தாலிகட்டிய அந்தக் கோரக் காட்சியைக்கண்டு உன் கண்களிலே இரத்தம் சிந்தவில்லையா? ஐயோ என் உள்ளத்தின் குமுறல், இதயத்தின் எதிரொலி, உன் செவிகளிலே விழவில்லையா? அம்மா...அம்மா......ஆம், ஆம்! உன் மீது குற்றமில்லை! இந்தச் சண்டாளர்களின் கூட்டத்தில் அபலையான என் தங்கையை விட்டுச் சென்றது என் அறியாமையே! அந்தோ! நானே சண்டாளன்! நானே சண்டாளன்...ஆம். மனமற்ற இத் திருமணத்தை உதறித் தள்ளிவிட்டு நாளையே மறுமணம் செய்வேன் என் தங்கைக்கு! நீயல்ல உன் தமையனல்ல, இந்த உலகமே எதிர்த்து நின்றாலும் சரி, கவலையில்லை. மறுமணம் செய்தே தீருவேன். இருளடைந்த என் அருந்தங்கையின் வாழ்க்கையில் ஒளி நிலவட்டும். மனம் பொருந்தா மணம் மண்ணாய்ப் போகட்டும்.

(வெறி கொண்டவன்போல் ஓடுகிறான்.)

---

## காட்சி 30.

**இடம்:** *திவான்பகதூர் மாளிகை* **காலம்:** *மாலை.*

**பாத்திரங்கள்:** *லீலா, திவான்பகதூர், நடராஜன்.*

*[லீலா, பானுவின் படம் ஒன்றைக் கையில் வைத்துத் தனக்குள் அழுதுகொண்டிருக்கிறாள்.]*

**லீலா:** *என் அன்பே! என் மனமார உங்களைத்தானே நம்பி இருந்தேன். கனவிலும் நான் தங்களை மறந்ததில்லையே! என்மேல் தங்களுக்கு ஏன் இவ்வளவு கோபம்? நான் இரண்டு மூன்று முறை கூப்பிட்டனுப்பியும் என்னைப் பார்க்காமலும், எழுதியனுப்பிய கடிதங்களுக்கும் பதில் அனுப்பாமலும், இருப்பதை நினைத்தால் நீங்கள் என்னை உண்மையில் கைவிட்டு விட்டீர்களா? அல்லது என்னையே தவருக நினைத்து விட்டீர்களா? எனக்கொன்றும் புரியவில்லையே! (பொன்னம்பலம் பிரவேசித்து மறைவாக நின்று கவனிக்கிறுர்) அன்பரே! நான் வேருெருவனுக்கு மனைவியாக்கப் பட்டிருப்பது என் குற்றமா? ஐயோ! இந்தப்பாவி இந்தக் கிழவனிடத்திலிருந்து என் கற்பைக் காப்பாற்றிக் கொள்ள தினமும் மானத்தை விட்டுப் பேயாடுவதைத் தாங்கள் எப்படி அறியமுடியும்? ஐயோ என் உண்மை நிலையை நீங்கள் அறிந்திருப்பீர்களா? அறிந்தால், என்னை இத்துன்பத்திலிருந்து காப்பாற்ருமல் இருப்பீர்களா? நாதா! எனக்கு ஒன்றும் புரிய வில்லையே! ஒருக்கால் வேருெருவனுக்கு மனைவியாக்கப்பட்டவளை நாம் விரும்பினுல் ஊர் உலகம் நகைக்குமே என்று பயப்*

படுகிறீர்களா? அப்படியானுல் எனக்காக—அநியாய மான முடிவடைந்த தங்கள் உண்மைக் காதலிக்காக என் மறைவுக்குப் பின்னுவது நீங்கள் வருந்தியே திரவேண்டும். என் அண்ணு என்றைக்கு வந்து சேரு வாரோ? இந்தப் பாவியின் இருண்ட வாழ்வு என்று முடிவுறுமோ? அதன் பிறகாவது தாங்களே தங்கள் தவறை உணர்ந்து அதற்காக வருந்தித்தான் திரவேண்டும். (நீண்ட பெருமூச்சோடு) ஹும்— இதுதானு தாங்கள் என் மீது கொண்ட உண்மைக் காதலின் பயன்...

(லீலா பாட்டு)

மாமதியும் எழிலாய்
 வான் மீதெழுந்ததுவே முழு (மா)

தாமரை குளிர் தென்றலும்
 எனை தகிப்பதேனறியேன்
இனி சகிக்கும் வகைதெரியேன் (மா)

நாதமில்லா வீணைபோல்
 நான் இன்றுனேன்
காதலன் வாராரோ வருவாரோ தோணேன்
கெதியிலா அபலையாய்
சோதனை செய்யலாகுமா
இது தூய தன்மையதோ
என்ன மாயமோ சூதோ (மா)

(பொன்னம்பலம்பிள்ளை ஆத்திரத்தோடு வெளியில் வந்து மெள்ளக் கனைக்கிறுர்; லீலா திடுக்கிட்டுப் படத்தை மறைக்கிறுள்.)

பொன் : ஏய்! அது என்ன? எங்கே இப்படிக் கொடு பார்ப்போம்.

**லீலா :** ஒன்றுமில்லை, உம்.........வெறும் காகிதம்.........

**பொன் :** காகிதமா! ஏதோ படத்தைப் போலல்லவா...... தெரிகிறது.

**லீலா:** ஆமாம், அது எங்கண்ணுவுடைய படம்.

**பொன் :** என்ன, உன் அண்ணுவுடைய படமா? எங்கே, இப்படிக் கொடு பார்ப்போம்.

**லீலா :** ஊஹூம்? உங்களிடத்தில் கொடுத்தால் நீங்கள் கிழித்து விடுவீர்கள்.

**பொன் :** அதெல்லாம் அப்படி ஒன்றுங் கிழித்துவிடமாட்டேன்; சும்மா கொடு.

**லீலா :** இல்லை, என்னைத் தொந்தரவு செய்யாதீர்கள்; நான் கொடுக்கவே மாட்டேன்.

**பொன் :** என்ன ! நான் கேட்கிறேன் ; கொடுக்கவே முடியாதா ! எனக்கு எல்லாம் தெரியும். நீ உன் அண்ணனையே காதலிப்பவளென்று ! மரியாதையாய்க் கொடு.

**லீலா :** போதும் நிறுத்தும். வித்தியாசமாய் ஒன்றும் பேச வேண்டாம்.

**பொன் :** என்னடீ ! போனுல் போகிறதென்று பார்த்தால் அளவுக்கு மீறுகிருய். இப்பொழுது கொடுக்க முடியுமா? முடியாதா?

**லீலா :** முடியாது.

**பொன் :** முடியாது, ஊம்-சரி. கொடுக்கவேண்டாம்; அந்தக் கள்ளப் புருஷன் யாரென்ருவது சொல்.

**லீலா :** அதுவும் முடியாது.

**பொன்;** (கோபச் சிரிப்பு) தேவடியாச் சிரிக்கி! இப்பொழுது தெரிகிறதடி நீ பேயாடிய நாடகமெல்லாம், ஹூம் கொடு இப்படி. (படத்தைப் பிடுங்க எத்தனிக்கிறார். முடியாமல் தள்ளாடிக் கீழே விழுகிறார்; கோபம் அதிகரிக்கிறது.) அவ்வளவு திமிரா உனக்கு? மயிலே மயிலே என்றால் இறகு போடுமா, இருக்கட்டும் (பக்கத்தில் மாட்டியிருந்த சவுக்கை யெடுத்து அடிக்கிறார். லீலா-அண்ணா! அண்ணா! என்று கத்துகிறாள். தொடர்ந்து அடிக்கிறார்; அடி தாங்காமல் சோர்ந்து, ஐயோ! 'ஐயோ! அண்ணா! அண்ணா!' என்று அடியற்ற மரம்போல் சாய்கிறாள்.)

**பொன்:** (ஒரு கையில் மீசையை முறுக்கிக்கொண்டே) அண்ணா! அண்ணா! எங்கேயடி அண்ணன்? அண்ணன் நீ கூப்பிட்ட உடனே கடலைத் தாண்டி அப்படியே வந்து குதித்து விடுவானோ? ஏண்டி! (மறுபடியும் சவுக்கை ஓங்கி அடிக்கப்போகிறார். அப்போது அங்கு வந்த நடராசன் தாவி திவான் பகதூரின் கையிலிருக்கும் சவுக்கைப் பிடுங்கிக் கொண்டு, திவான் பகதூரை ஆத்திரம் தீர அடிக்கிறான். திவான் பகதூர், ஐயோ! ஐயோ! அடே அடிக்காதேடா! என்று கத்துகிறார்.)

**லீலா:** ஆ! அண்ணா (என்று ஓடி அண்ணனைக் கட்டிக் கொள்ளுகிறாள்.)

**பொன்:** (அடியைத் துடைத்துக்கொண்டே எழுந்து) அடே அயோக்கியப் பயலே! என் பெண்டாட்டியை நான் அடித்தால் நீ யாரடாவன் கேட்பதற்கு? இங்கே யாரைக் கேட்டுடா உள்ளே வந்தாய்?

**நட:** உன் பெண்டாட்டி! உன் பெண்டாட்டியா? புருஷன் அழகைப்பார்! கிழட்டு அயோக்கியப் பயலே!

(மறுபடியும் ஒருபோடு போடுகிறான், கிழவன்மேலே விழுந்தபடியே)

**பொன் :** அடே யாரடா அங்கே? முனியா! ராமா! ஜம்பு! எல்லோரும் வாங்கடா இங்கே! (ஆட்கள் ஓடிவருகிறார்கள்) இவனைப் பிடித்து வெளியில் தள்ளுங்கள். (வேலைக்காரர்கள் நடராஜனைப் பிடித்து இழுத்துக் கொண்டு போகிறார்கள், லீலா, அண்ணா! அண்ணா! என்று கத்திக்கொண்டு தொடருகிறாள். திவான் பகதூர் அவள் தலைமுடியைப்பற்றி இழுத்துக் கீழே தள்ளி)

யாரங்கே? (வேலைக்காரி லக்ஷ்மி வருகிறாள்) இவளை இழுத்துக் கொண்டு போ! (அழைத்துப் போகிறாள்) அயோக்கியப் பயல், என்னிடமா இந்த ஜம்பமெல்லாம் செல்லும்? இருக்கட்டும்; பூண்டோடு தொலைத்து விடுகிறேன்.

---

## காட்சி 31.

---

**இடம் :** திவான் பகதூர் மாளிகையின் தோட்டம்

**காலம் :** மாலை

**பாத்திரங்கள் :** ஜம்பு, லீலா.

**[லீலா ஒரு பெஞ்சின் மீது உட்கார்ந்து தேம்பித் தேம்பி அழுதுகொண்டிருக்கிறாள். ஜம்பு திருடனைப் போல் அடிமேல் அடிவைத்து வந்து பக்கத்தில் நின்று மெல்லக் கனைக்கிறான். லீலா திடுக்கிட்டுக் கண்ணைத் துடைத்துக் கொள்ளுகிறாள்.]**

**ஜம்பு :** லீலா! ஏன் ஒரு மாதிரி இருக்கிறாய்? வீட்டில் ஏதாவது......

**லீலா:** நான் எப்படி இருந்தால் உனக்கென்ன? நீயேன் நான் தனியாக இருக்கும் இடத்திற்கு வந்தாய்?

**ஐம்பு:** நெடுநாளாகவே உன்னைத் தனித்துக் கண்டு பேச வேண்டுமென்பது ஆசை. அதற்கு இன்றுதான் சந்தர்ப்பம் கிடைத்தது.

**லீலா:** எனக்குப் பேசச் சந்தர்ப்பமில்லை. நீ போகலாம்.

**ஐம்பு:** ஏன் என்னைக் கண்டால் பிடிக்கவில்லையா? என்ன ஆமாம், பாலசுந்தரத்தைக் கண்டால் பிடிக்கும்.

**லீலா:** ஐம்பு! நாம் பள்ளிக்கூடத்தில் படித்த காலத்திலிருந்தே உன்னை எனக்கு நன்றாகத் தெரியும். தயவு செய்து நீ போய்விடு. இங்கு நாம் தனித்திருப்பது தகாது.

**ஐம்பு:** லீலா! அன்றுதான் பாலசுந்தரத்தை நம்பி இருந்தாய். இப்போது அவனும் கைவிட்டு விட்டான்! இப்பொழுதாவது என்னை உனது ஆசை நாயகனாக...

**லீலா:** ஐம்பு, நீ மரியாதையாகப் போகமாட்டாயா என்ன? உலகில் நான் யாரையுமே விரும்பவில்லை.

**ஐம்பு:** என்ன! பாலுவைக்கூடவா?

**லீலா:** ஆமாம்.

**ஐம்பு:** ஓகோ! அதனால்தான் இங்கு வந்த பிறகு கூட இரண்டு முறை தபால் எழுதிக்கொடுத்து ஆள் அனுப்பினாயோ?

**லீலா:** யார் நானா?

**ஐம்பு:** நீ தான், லீலா! எனக்கு எல்லாம் தெரியும். பள்ளியில் படித்த காலத்திலும் அதன் பிறகு நீ பள்ளியை நிறுத்திய பிறகும், தினமும் நீயும் அவனும் உங்கள்

வீட்டுத் தோட்டத்தில் சந்திப்பதிலிருந்து நேற்று லெட்டர் எழுதிக் கொடுத்தனுப்பியது வரை எல்லாம் எனக்குத் தெரியும். நீ என்னை ஏமாற்ற முடியாது.

லீலா : ஆமாம் உண்மைதான், அது என் இஷ்டம். அதைக் குறித்துக் கேட்க நீ யார்?

ஜம்பு : எனக்குக் கேட்க உரிமை யில்லாமலா நான் கேட்கிறேன்? நீ இனி பாலுவை நம்பிப் பயனில்லை. அவன் உன்னை விரும்பவே மாட்டான். அவன் என்ன என்னைவிட உயர்ந்தவன். நீ அவனிடத்தில் விரும்பும் இன்பத்தை என்னிடம் விரும்பினால் கிடைக்காதா என்ன?

லீலா : சீச்சீ மடையா! என்ன சொன்னாய்?

ஜம்பு : லீலா! பதறாதே. இதற்குமுன் பல தடவைகளில் சொன்னதைத்தான் இன்றும் சொல்கிறேன். ஆனால் நீ இன்று திவான்பகதூர் மனைவி. நான் உங்கள் வேலைக்காரன் என்று நினைக்கலாம். ஆனால் அந்த திவான்பகதூர் இந்த ஜம்புவின் கையில் இருக்கிறார் தெரியுமா? பிசாசு ஆடிக் கிழவனை ஏமாற்றுவது போல் என்னை ஏமாற்றிவிட முடியாது. என்னை நீ பகைத்துக்கொண்டால் உன் ரகசியங்களை எல்லாம் வெளியிட்டு விடுவேன். லீலா, லீலா என் மனதை நீ யறியவில்லை. நான் எத்தனை வருஷங்களாக உன்னைக் கெஞ்சுகிறேன். எவ்வளவு பாடுபடுகிறேனென்பது உனக்குத் தெரியுமா? என் எண்ணத்தைக் கடைசியாக இப்படியாவது நிறைவேற்றலாமென்று தானே இங்கு திவான் பகதூர் வீட்டில் வேலைக்கு அமர்ந்து இந்தக் கல்யாணத்தையும் முடித்து வைத்தேன்.

லீலா : (ஆச்சரியத்துடன்) என்ன! கல்யாணத்தை நீ முடித்துவைத்தாயா?

ஜம்பு : ஆம், லீலா! உன் மீதுள்ள காதலால் உன்னை எப்படியாவது பாலுவிடமிருந்து பிரிக்கவேண்டு மென்று நினைத்தேன். அதற்காகவே திவான்பகதூரிடம் வேலைக்கமர்ந்தேன். அவர் குணம் எனக்குத் தெரியுமாகையால் அவரை நாலாந் தாரமாகக் கல்யாணம் செய்துகொள்ளும்படி தூண்டி, உன்னைப் பற்றியும் உனது அழகைப் பற்றியும் அடிக்கடி அவரிடம் தூபம்போட்டு, உன் போட்டோவையும் காட்டி அவரை உன் அழகில் மயங்கும்படி செய்தேன். நான் ஆட்டிவைத்தேன், அவர் ஆடினார். பழைய குடும்ப வருத்தங்களைக்கூடப் பொருட்படுத்தாமல் அவர் பெண் கேட்க வந்தார். எப்படியும் உங்கள் அண்ணன் இருந்தால் காரியம் முடியாதென நினைத்த நான், தகுந்த சூழ்ச்சி செய்து உன் அண்ணனையும் ரங்கோனுக்குக் கடத்தினேன். உங்கள் கல்யாணத்தை முடித்துவைத்தேன். ஏன், திவான்பகதூருக்காகவா? இல்லை. எப்படியாவது உன்னை பாலுவிடமிருந்து பிரித்துவிட்டால், பிறகு நீ வயது சென்ற திவான்பகதூரை வெறுத்து என் இஷ்டத்திற்கு இணங்குவா யென்றுதான். லீலா! லீலா! நான் செய்ததெல்லாம் அக்ரமம்தான். ஏன் அப்படிச் செய்தேன்? உன் மீதுள்ள, ஒப்பற்ற காதலால்தான். இப்பொழுது நீ சரியென்று ஒரு வார்த்தை சென்னல் போதும். நமது வர்ழ்க்கை இந்திர போகமாய்த் திகழும். இத்திரண்ட செல்வம் எல்லாம் உன்னையே சேரும்; நாம் இருவரும் மதனும் ரதியும்போல் இன்பமாய் வாழலாம். கிழவனைப் பற்றி நீ கொஞ்சமும் கவலைகொள்ள

வேண்டாம். அவனை ஒரே நிமிஷத்தில் முடிப்பதற்கு எனக்கு வழி தெரியும். எங்கே! எங்கே! ஒரு வார்த்தை சொல்லு, ஒரு வார்த்தை சரி என்று சொல்லு. (லீலாவை நெருங்குகிறான்.)

லீலா : சீச்சீ மிருகமே! உனக்கு வெட்கமில்லை. தூ! உன் நெஞ்சு என்ன கல்லா அல்லது இரும்பா? நான் படித்த, கேள்விப்பட்ட கதைகளில் கூட உன்னைப்போல் ஒரு அசுரன் இருந்ததில்லையே! மனிதர்களிலும் இவ்வளவு கொடிய கடின சித்தம் உடையவர்கள் இருப்பார்கள் என்று நான் நினைத்ததில்லையே. ஐயோ, அடப்பாவி! உன் வாழ்க்கையைக் கெடுத்ததெல்லாம் நானே என்று இவ்வளவும் என் முன்னாலேயே கூற உனக்கு என்ன துணிவு? அடே சண்டாளா! இதுதானா நீ என்மேல்கொண்ட உண்மைக் காதல்! இதுதானா ஒப்பற்ற காதல், காமவெறி என்று சொல். நீ என்னை விரும்பினாய். ஆனால் நான் உன்னை விரும்பவில்லையே! தானாகக் கனியாத காயைத் தடிகொண்டடித்தால் பழுக்குமா? வெம்பி அழுகி அல்லவா போகும். (அழுகிறாள்) ஐயோ, ஜம்பு! ஜம்பு! உன் காம நோயைத் தீர்க்க வேறு ஒரு வழியும் தோன்றவில்லையா? எனக்காக நீ செய்த அக்ரமங்களை யெல்லாம் நீ தியாகமென்று நினைக்கிறாய்? உன் மேல்நாட்டு நாகரீக மோகம் உன் பள்ளிப்படிப்பு உன்னை எவ்வளவு கேவல வழிகளில் செலுத்திவிட்டதென்பதை உணராமல் நீ செய்ததை யெல்லாம் பெருமையாகச் சொல்லிக் கொள்ளுகிறாயே! ஐயோ! என்னைக் கெடுத்து, என் அண்ணனை ஊரை விட்டுப் பிற நாடு கடத்தி, இத்தனையும் போதாதென்று இதுவரை உன்னை நம்பி உன் சொல்லைக்கேட்டு, உனக்கு ஊதியம் கொடுத்துக்

காப்பாற்றி வந்த திவான் பகதூரையும் கொன்று விட்டுச் சுகமடைய நினைக்கும் நீ ஒரு மனிதனு? நீ விரும்புவது காதலா? இல்லை! இல்லை! நீ கற்பனைக்கும் எட்டாத ஒரு அரக்கன்; 'காமவெறி' பிடித்த மிருகம். பைசாச வெறிகொண்ட ஒரு காமப் பிசாசுதான் நீ. ஆம்; இத்தனை அநியாயங் களையும் செய்த உனக்கு எதுதான் இனிக் கடினம் இல்லை? நீ எதையும் செய்வாய், அட சண்டாளா!' நரம்பும், தோலும், எலும்பும், தசையும், மலமும், மூத்திரமும் நிறைந்த இந்த நாற்ற சரீரத்திற்குத் தானே இத்தனை அனியாயங்களும் செய்தாய்? இதோ எடுத்துக்கொள், எடுத்துக்கொள். நானே கொடுக்கிறேன். நீ என்ன வேண்டுமானுலும் செய்து கொள். ஆனுல் என் ஹிருதயத்தை, நான் வேருெருவ ருக்கு அளித்துவிட்ட என் உள்ளத்தை என் இன்ப நாயகன் இடைவிடாது இருக்கும் இதயத்தை (ஆவேசம் வந்தவளைப் போல் நெஞ்சில் திடீர் திடீ ரென்று பலங்கொண்டவரை தாக்கிக்கொள்ளு கிருள். ஐம்பு நடுங்குகிருன்.) நீ கவர்ந்து விட முடியாதே? (அடியற்ற மரம்போல் மூர்ச்சையோடு கீழ்ழ சாய்கிருள்.)

**ஐம்பு:** லீலா! லீலா! தெரியாத்தனம். மோக வெறி. என்னை மன்னித்து விடு; என்னை மன்னித்து விடு. நான் இனி உன் சகோதரன், சத்தியமாக நான் இனி உன் ச கோ த ர ன். 'லீலா, லீலா!' (லீலா கீழே விழுவதற்கு முன், ஐம்பு தன் கைகளில் தாங்கிப் பக்கத்தில் உள்ள கல்லின்மேல் கிடத்து கிருன். இச் சமயம் அத் தோட்டத்திற்கு அப்புறம் ரோட்டில் போய்க்கொண்டிருந்த பாலு, 'லீலா லீலா' என்ற ஐம்புவின் சப்தத்தைக் கேட்டுத் திடுக்கிட்டுத் தோட்டப் பக்கம் எட்டிப் பார்க்கிருன். அப்போது

லீலா ஜம்புவின் அணைப்பில் இருப்பதைக் கண்டு தப்பபிப்ராயத்தோடு பற்களைக் கடித்துக்கொண்டு திரும்பி விடுகிருன். இதே சமயம் ஜம்புவும் பாலு வைப் பார்த்து விடுகிருன். லீலாவுக்குத் தண்ணீரைத் தெளித்து விசிறிக் கொண்டே) ஐயோ! இதென்ன கிணறு வெட்ட பூதம் புறப்பட்ட கதைபோல் ஆகி விட்டதே! இந்த மகா உத்தமிக்கு நான் செய்த தீமை யெல்லாம் போதாதென்று கடைசியில் நான் செய்த நன்மையுமல்லவா தீமையாகிவிட்டது. மயங்கி வீழ்ந்த லீலாவைத் தொட்டுத் தூக்கியதைக்கண்ட பாலு, என்னைத் தவருகவல்லவா நினைத்துக்கொண்டு போகி ருன். இனி அவனை எப்படி இந்த உண்மையை நம்பச் செய்வேன்? (கண்ணீர் விடுகிருன். லீலா மெள்ளப் புரண்டு கண்ணைத் திறக்கிருள்) லீலா, லீலா, இதோ பார்! நான் இனி உன் சகோதரன். சத்தியமாக நான் இனி உன் சகோதரன். லீலா! நீ என்னை மன்னிக்க மாட்டாயா? என்னை மன்னிக்க மாட்டாயா?

(கைகளைப் பிடித்துக் கொண்டு கதறுகிருன். லீலாவும் கண்ணீர் விடுகிருள்.)

**லீலா:** உன்னைக் கடவுள் மன்னிப்பார். எழுந்திரு.

**ஜம்பு:** சரி, லீலா! கெட்ட குடியே கெடும், பட்ட காலிலே படும் என்பது போல் இப்போதும் நமக்கு ஒரு ஆபத்து. மயங்கி வீழ்ந்த உன்னைத் தூக்கும்போது சப்தம் கேட்டு இப்பக்கம் போன பாலு எட்டிப் பார்த்துவிட்டு நம்மீது தப்பபிப்ராயம் கொண்டு போகிருன். நான் சீக்கிரம் போய் உண்மையை விளக்கி அவன் சந்தேகங்களைத் தெளிவித்து முன்பு உங்களைக் கெடுத்துப் பிரித்த இந்தச் சண்டாளனே ஒன்றுபடுத்தியும் வைத்துவிடுகிறேன். நீ போ பங்க ளாவுக்கு; நான் இதோ வருகிறேன்.

**லீலா:** வேண்டாம் வேண்டாம். அவருக்கு இந்தச் சந்தேகம் மட்டுமல்ல. அவர் சந்தேகங்கள் எல்லாம் தாஞகவே ஒரு நாள் நிவர்த்தியாகும். அப்போது அவர் உணர்ந்தால் போதும்.

**ஜம்பு:** இல்லே, இல்லே, லீலா! இனி உன் அண்ணன் நடராஜன் ரெங்கோனில் இருக்கிருரென்று நினேக்காதே. இதோ இதோ இருக்கிறேன். இனி எனக்கு உன் இன்ப வாழ்வைக் கண்டு ஆனந்திப்பதைத் தவிர வேருென்றுமில்லே. உண்மை யாவும் பாலுவுக்கு உரைப்பேன். அவனிடமும் மன்னிப்பைப் பெறுவேன். அவன் சம்மதத்தையும் பெறுவேன். திவான் பகதூரே சம்மதித்து உங்கள் மறுமணத்தை நடத்தி வைக்க ஏற்பாடு செய்வேன். அதுதான் நான் உங்களுக்குச் செய்த தீமைகளுக் கெல்லாம், பிராயச்சித்தமாகும். போ, நீ போ, நான் வருகிறேன்.

(ஓடுகிருன்)

---

## காட்சி 32.

---

**இடம் :** பாலு வீடு, தனி அறை. **காலம் :** மாலே.

**பாத்திரங்கள்:** பாலு, நடராஜன், ஜம்பு.

[பாலசுந்தரம் ஆத்திரத்துடன் லீலாவின் படத்தை எடுத்து வைத்துக் கொண்டு]

**பாலு:** அடி சண்டாளி! துரோகி! விபசாரி! இன்னுமா உன் படம் இங்கு இருக்க வேண்டும்? மோசக்காரி! (படத்தைக் கீழே போட்டு மிதிக்கிருன்) பணத்திற்காக ஒரு கிழவனேக் கட்டிக் கொண்டாய்! காம நோயைத் தீர்க்க இப்போது ஒரு வாலிபனே அதிலும் நெடுநாளாய் வேப்பங்காய் என்று வெறுத்துப்

பாசாங்கு செய்த ஜம்புவைப் பிடித்துக் கொண்டாய். ஆகா! என்னே உன் வாழ்க்கை. தூ தூ மகாவெட்கம், விபசாரி கூட இவ்வளவு இழிவாய் நடக்கத் துணி யாள்—சே! என்ன உலகமோ! (வருத்தத்துடன் தலை யைக் கவிழ்ந்து கொண்டிருக்கிறான். நடராஜன் வரு கிறான். பாலு திடுக்கிட்டு) யார்? நீங்களா! வாருங் கள் இப்படி உட்காருங்கள். ஊரிலிருந்து எப்பொழுது வந்தீர்கள்?

**நட:** (உட்கார்ந்தபடியே) நேற்று வந்தேன்.

**பாலு:** ஏது இவ்வளவு தூரம்? அபூர்வமாக இருக்கிறதே!

**நட:** ஏன்! வரக்கூடாதா என்ன?

**பாலு:** இல்லை, இல்லை. இதுவரை வந்ததில்லையே என்று தான் கேட்டேன்.

**நட:** உன்னிடம் ஒரு முக்கியமான விஷயத்தைக் குறித் துப் பேச வேண்டும்; அதற்காகத்தான் வந்தேன்.

**பாலு:** யார்—என்னிடத்திலா?

**நட:** ஆம், என் தங்கை லீலா விஷயமாக!

**பாலு:** என்ன! உங்கள் தங்கை விஷயமாகவா? என் னிடமா?

**நட:** ஆமாம், உன்னிடம்தான் பாலு! உனக்கும் லீலா வுக்கும் எவ்வளவு ஆழ்ந்த அன்பு உண்டென்பது எனக்குத் தெரியும்.

**பாலு:** உண்மைதான்! அது ஒரு காலம். அதற்கு இப் பொழுது என்ன? லீலாவுக்குத்தான் கல்யாணமாகி எத்தனையோ நாட்களாயிற்றே.

சுட: ஆமாம் கல்யாணமாகிவிட்டது, அதை நீயும் ஒப்புக் கொள்ளுகிருயா? உன் இருதயம் அதை ஆதரிக் கிறதா?

பாலு: நான் ஒப்புக்கொண்டாலும் ஒப்புக் கொள்ளாவிட் டாலும் உலகம் ஒப்புக்கொண்டுவிட்டது. இனி என்ன?

சுட: உலகம் ஒப்புக்கொள்ளும், இந்த அக்ரம உலகம் எதைத்தான் ஒப்புக்கொள்ளாது? உலகமா ஒப்புக் கொண்டது—இல்லை. உலகத்தில் உள்ள மடையர் கள் ஒப்புக் கொண்டார்கள் என்று சொல்.

பாலு: அதற்கு நாமென்ன செய்ய முடியும்?

சுட: நாமென்ன செய்ய முடியுமா? எல்லாம் நம்மிடம் தான் இருக்கிறது? நம்மைப் போன்ற வாலிபர்கள் துணிந்தால் அதைத் தடுக்க முடியுமா முடி யாதா?

பாலு: முடியும். முடியாதென்று யார் சொன்னது!

சுட: அப்படியானுல் நீ என் தங்கையை மனப் பூர்வ மாகக் காதலித்திருந்தும் அவளுக்கு ஏற்பட்ட இந்த அக்ரமத்தை ஏன் தடுத்திருக்கக் கூடாது? தடுக்க முடியா விட்டாலும் பரவாயில்லை. தடுக்கவாவது முயற்சி செய்தாயா?

பாலு: இதில் நான் என்ன செய்ய முடியும்? லீலாவே சம்மதித்துக் காரியம் நடக்கும்போது அதைத் தடுக்க எனக்கு என்ன உரிமை யிருக்கிறது?

சுட: பாலு! உன் குற்றத்தை நீ லீலாவின் மீது சுமத்தப் பார்க்கிருய். பெண்களின் சம்மதத்தைக் கேட்டுக் கல்யாணம் செய்வதென்பதே நம் நாட்டு வழக்க மில்லையே! உடைந்து போகும் பொம்மையை

ொக்கவும், கிழிந்து போகும் புடவையை வாங்கவும், பெண்களின் அபிப்பிராயத்தைக் கேட்கும் பெற்ருேர்கள், வாழ்க்கை முழுவதும் இன்ப துன்பங்களுக்குக் காரணமா யிருக்கும் திருமண விஷயத்தில் தங்கள் மனம்போன போக்கில் தானே நடந்து வருகிருர்கள். பெண்களுக்கு அந்தச் சுதந்திரமாவது இருந்திருந்தால் நம் நாடு எவ்வளவோ முன்னேற்றம் அடைந்திருக்குமே...பாலு! போனது போகட்டும். இப்பொழுது ஒன்றும் மோசம் வந்து விடவில்லை. உன்னையே உண்மையாய் நேசித்து வரும் ஒரு பெண்ணை, அல்லும் பகலும் உன்னையே நினைந்து நினைந்து உருகும் ஒரு அபலையை இப்போது நீ காப்பாற்றப் போகிருயா, இல்லையா?

**பாலு**: என்ன லீலாவையா? இனிமேலா? அது எப்படி முடியும்?

**நட**: ஆம், லீலாவைத்தான்! என் தங்கை லீலாவைத் தான் பாலு! நான் மானத்தை விட்டுச் சொல்லுகிறேன்: லீலாவை நானே அழைத்து வந்து உனக்கு மறுமணம் செய்து வைக்கிறேன்; சம்மதம் தானே?

**பாலு**: (ஏளனச் சிரிப்புடன்) அது நமக்குச் சரி. ஆனாலும் எங்கள் வீட்டிலுள்ளவர்களும் மற்றவர்களும் சம்மதிக்க வேண்டாமா? மேலும் இன்னொருவனுக்கு வாழ்க்கைத் துணைவியான ஒருத்தியை நான் திரும்பவும் மணப்பதென்ருல் உலகம் என்னைப் பழிக்காதா?

**நட**: அதைத்தான் நான் முன்பே சொல்லி விட்டேனே, பாலு! நம்மைப் போன்றவர்கள் துணிந்தால்தான், இவைகளை யெல்லாம் சீர்திருத்த முடியும்.

**பாலு**: என்னை மன்னிக்க வேண்டும். நான் இன்னும் அவ்வளவு சிறந்த சீர்திருத்தக்காரன் என்ற நிலைக்கு வரவில்லை.

**நட:** பாலு! வெட்கமில்லையா உனக்கு! நான் அந்த நிலைக்கு வரவில்லையென்று சொல்ல உன் நாவு கூச வில்லை? அவ்வளவு நெஞ்சுத் துணிவில்லாத நீ ஏன் என் தங்கையைக் காதலித்தாய்? பெற்றோருக்கும் உலகத்துக்கும் பயப்படும் இந்தப் புத்தி உனக்கு ஏன் அப்பொழுதே இல்லாமல் போயிற்று? காதலிக்கத் துணிந்த உனக்கு அதன் விளைவுகளை ஏற்கத் துணி வில்லையா? பாலு! காதல் எதையும் பொருட்படுத்தா தென்பதை நீ யறியாயா? காதலுக்காக எத்தனையோ பேர் எவ்வளவோ பெரிய தியாகங்களை யெல்லாம் செய்திருக்கிறார்களே! அப்படியிருக்கப் பிறர் இழி வாகப் பேசுவார்களே என்பதற்காக உன் காதலியை இழந்துவிடப் போகிறாயா?

**பாலு:** இழந்துவிடப் போவதென்ன? (பெருமூச்சிட்டு) இழந்துதான் ஆயிற்றே. இனியொரு தரமா அதை விரும்பவேண்டும்?

**நட:** அப்படியானால் நான் சொல்வதை நீ கேட்க மாட்டாயா?

**பாலு:** கேட்கக் கூடியதாயில்லை. மன்னிக்கவேண்டும். என் உள்ளம் முன்பே புண்பட்டிருக்கிறது. நீங்கள் மறுபடியும் மறுபடியும் ஒரு விபசாரிக்காகப் பரிந்து பேசுவது......

**நட:** (நெருப்பை மிதித்தவனைப் போல் துடித்து) ஆஹா, என்ன சொன்னாய்! (ஓங்கி பாலுவை அறை கிறான், ஆத்திரத்தில் வெறி பிடித்தவன்போல்) விபச்சாரி! விபச்சாரி!! யார் என் தங்கையா விபச் சாரி! அடே பேடி, உன்னையும் ஒரு மனிதன் என்று நினைத்துத் தன் விலை மதிப்பற்ற காதலை விரையு மாக்கினாளே, என் தங்கை. துரோகி! உன்னைப்போல்

உணர்ச்சியற்ற சோம்பேறிகள் இருக்கும்வரை இந்த நாடு எப்படி முன்னேறப்போகிறது? ஒரு பேதைப் பெண்ணின் உள்ளத்தில் காதலை விதைத்து வளர்த்துப் பயிராக்கி முடிவில் அதை அடியோடு பாழ்படுத்திவிட்டாயே! சீச்சீ, ஆண் மகனா நீ? இனி யாவது உன்னைப் போன்ற பேடிகள் இப்படிச் செய்யாமல் இருக்கும் பொருட்டாவது உன் மூடத் தனத்துக்கு, உன் அற்பத்தனத்துக்கு, உன் கோழைத் தனத்துக்கு, இல்லை, இந்நாட்டுக் கற்பரசிகளின் விடுதலைக்காகவாவது, என் அன்பில் என் ரத்தத்தில் ஊறிய என் தங்கையையும் என்னையும் பலி கொடுக்கிறேன். பிறகாவது உன் போன்ற கோழைகள் வாழட்டும். (நடராஜன் ஓடுகிறான்.)

**பாலு:** (எதிர்பாராத விதமாய் வீழ்ந்த அடியிலும் பேச்சிலும் ஸ்தம்பித்துக் கன்னத்தைத் தடவியபடி, தனக்குள்) லீலா விபச்சாரி இல்லையா! லீலா விபச்சாரி இல்லையா! லீலா விபச்சாரி யில்லையா? நான் பார்த்தேனே! அவன் அந்த ஜம்பு அவளைத் தன் இரு கைகளாலும் அணைத்துத் தூக்கி.........

(மற்றொரு புறத்திலிருந்து ஜம்பு ஓடி வருகிறான்.)

**ஜம்பு:** பாலு! பாலு! லீலா விபச்சாரியில்லை. லீலா விபச்சாரியில்லை. நீ நினைப்பது தவறு. அவள் மகா உத்தமி!

**பாலு:** யார், ஜம்புவா? லீலாவின் புதிய காதலனா? அடே அயோக்கியப் பயல்களா! யாரை ஏமாற்றப் பார்க்கிறீர்கள்? (பாலு திடீரென்று ஜம்புவின் மீது பாய்ந்து அவன் கழுத்தைப் பிடித்து அழுத்திக் கொல்ல முயற்சிக்கிறான்.)

**ஜம்பு:** (கம்மிய குரலில்) பாலு! சத்தியமாகச் சொல்லுகிறேன். உன் காதலி லீலா விபச்சாரியல்ல; மகா

உத்தமி. அவள் உன்மீது கொண்டது உண்மையான காதல், பரிசுத்தமான காதல், ஒப்பற்ற காதல்...

**பாலு :** என் லீலா உத்தமியா?

**ஜம்பு :** ஆம். என் வார்த்தையை நம்பு; அவளைக் கை விடாதே; காப்பாற்று! உங்கள் மறுமணத்திற்கு நானே ஏற்பாடு செய்கிறேன். பாவியாகிய என்னை மன்னித்துவிடு, என்னை மன்னித்துவிடு. இந்தப் பழிக் கெல்லாம் நானே காரணம்.

**பாலு :** லீலா......லீலா......ஐயோ.....நடராஜன் அவளைக் கொன்றுவிடுவதாக......லீலா......லீலா......

(அலறிக்கொண்டே ஓடுகிறான்)

---

## காட்சி 33.

---

**இடம்:** திவான் பகதூர் படுக்கை அறை. **காலம்:** இரவு

(நடராஜன் சாளரத்தின் வழியே மேல்மாடியில் குதிக்கிறான். தூரத்திலிருந்தே இதைக் கவனித்த பாலுவும் அதே வழியில் பின் தொடருகிறான். மேலே படுக்கை அறையில் மங்கிய தீபம் ஒன்று எரிந்து கொண்டிருக்கிறது. பொன்னம்பலம் ஒரு கட்டிலில் படுத்திருக்கிறார். லீலா கீழே தரையில் படுத்திருக்கிறாள். நடராஜன் திவான் பகதூர் மீது பாய்ந்து அவர் நெஞ்சில் பிச்சுவாவைச் செலுத்துகிறான். பொன்னம்பலத்தின் 'ஹா! ஐயோ'......என்ற கோரக் குரல் எங்கும் எதி ரொலிக்கின்றது. வேறொரு ஆள் மேன்மாடியில் குதிக்கும் சப்தம் கேட்ட நடராஜன், இன்னது செய்வதென்றே புரியாமல் பிச்சுவாவைக் கீழே போட்டுவிட்டு மற்றொரு புறம் தாவிக் குதித்து

ஓடி விடுகிறுன். அதே சமயத்தில் அங்கு வந்து பாலு அங்கு கீழே கிடந்த ரத்தம் தோய்ந்த பிச்சு வாவை நடுக்கத்துடன் எடுக்கிறுன். தூக்கத்தி லிருந்து கோர சத்தத்தைக் கேட்டுத் திடுக்கிட்டு எழுந்த லீலா ஒன்றும் புரியாமல் 'கொலே-கொலே-கொலே' என்று கத்துகிருள். வேலேயாட்கள் எல்லாம் விழித்து வந்து, 'விடாதே பிடி, பிடி' என்று கூச்சலிட்டுப் பாலுவைச் சூழ்ந்து பிடித்துக்கொள்ளுகிருர்கள். ஒருவன் விளக்கைப் போடுகிருன். வெளிச்சத்தில் பாலுவை ரத்தம் தோய்ந்த பிச்சுவாவுடன் கண்ட)

**லீலா :** ஹா! ஐயோ! இதென்ன! நான் காண்பது கனவா, அல்லது உண்மைதானு? எனக்கு ஒன்றும் விளங்கவில்லேயே!

(கீழே சாய்கிருள்)

**பாலு :** (தனக்குள்) எல்லாம் விதியின் விளேயாட்டு.

**கூட்டத்தில் ஒருவன் :** ஆளேப்பார், கொலேகாரப் பயலுக்கு வேதாந்தாம் வேறு! ஏண்டா நிற்கிருய்? சீக்கிரம் போலீஸ் ஸ்டேஷனுக்குப் போய் விஷயத்தைச் சொல் லிப் போலிசை அழைத்துவா? உம், போ சீக்கிரம்.

(ஒருவன் ஓடுகிருன்)

---

## காட்சி 34.

---

**இடம் :** வீதி

[வீதியில் பலர் பேசிக்கொள்ளுதல்[

**ஆள் 1 :** பாவம்! என்ன இருந்தாலும் ஒரு மனுஷனே இந்த மாதிரிக் கொலே செய்யக்கூடாது.

**ஆள் 2 :** அடபோங்க சார், பச்சைப் பசலேகளுடைய வாழ்க்கையைப் பாழ்படுத்துகிற இப்பேர்ப்பட்ட கிழட்டுப் பயல்கள் இருந்தா என்ன, செத்தா என்ன சார்?

**ஆள் 3 :** ஆமாமா. பாலசுந்தரத்தைப் போல நாலு பேரு இப்படித் துணிஞ்சாத்தான் இந்த மாதிரி அநியாயங்க ஒழியும்.

**ஆள் 1 :** ஆமா! நடராஜன்தான் ரொம்ப சீர்திருத்த வாதியாச்சே, ஏன் இந்தக் காரியத்தை முன்னுடியே தடுத்திருக்கக் கூடாது?

**ஆள் 2 :** அவன் தான் ரெங்கோனுக்குப் போயிட்டானே, இருந்தா சம்மதிப்பானு? தங்கச்சின்னு உயிரையே விடுறவனுச்சே!

**ஆள் 4 :** நடராஜனுக்குத் தகவலே எட்டியிருக்காதோ?

**ஆள் 3 :** கலியாணத்துக்கு அப்புறம் இங்கே வந்திருந்தானுமே, நான் பாக்கலே! கொலேக்கு அப்புறம் நடராஜனேயே காணுமாம்.

**ஆள் 1 :** ஆமா, பாலுவுக்கும் லீலாவுக்கும் முன்னுடியே தொடர்பு உண்டோ?

**ஆள் 4 :** பள்ளிக்கூடத்துப் பழக்கமாம்.அந்தப் பொண்ணு பாலுவையேதான் கட்டிக்கிருவேன்னு ஒத்தக்கால்லே நின்னுச்சாம்

**ஆள் 1 :** அடே, பின்னே அப்படியே பண்ணித் தொலேச்சிருக்கலாமே.

**ஆள் 2 :** அட அவன் ஒரு கோழைப்பயல் சார். வீட்டுக்குப் பயந்தவன்.

**ஆள் 3 :** இப்பக் கொலே செய்யத் துணிஞ்சவனுக்குக் கல்யாணத்துக்கு முன்னேயே புத்தியிருந்தா?...

**ஆள் 4 :** உம்-உலகமே இப்படித்தான். நம்மளவங்களுக்கெல்லாம் காரியம் முடிஞ்சதுக்கப்புறம்தானே மூளை தொறக்கும்.

ஆள் 1: ஏன் சார், ஐம்புவைப் பார்த்திங்களா? யாரு கூடவும் பேசுறதில்லே, என்னமோ ஒரு மாதிரி ஆளே மாறீட்டானே.

ஆள் 2: கேசைக்கூட அவன்தான் தீவிரமாய் நடத்துருன்.

ஆள் 3: உம் என்ன நடத்தி என்ன? தூக்குத் தண்டனே நிச்சயம்.

ஆள் 2: சே, நினேச்சாக் கண்ராவியா இருக்கு.

ஆள் 4: எல்லாம் அடுத்த விசாரணேயிலே தெரியும்.

ஆள் 2: கொலே பண்றது சர்க்கார் சட்டப்படி தப்புதான். ஆனு, வாழ்க்கையைக் கொலே செய்யிற இப்பேர்ப் பட்டவர்களே சர்க்காரே கொலே செய்திடனும். தர்ம ஞாயம் பார்த்தாத் தப்பேயில்லே.

ஆள் 1: சரி சரி, பேச்சு ரொம்ப தூரம் போகுது. பகல்லே பக்கம் பார்த்துப் பேசுங்க, பெரிய எடத்து விவகாரம் நமக்கெதுக்கு? உம், வாங்க.

(போகிருர்கள்)

---

## காட்சி 35.

---

இடம்: ஷண்முகநாத புரத்திலிருந்து 70-மைல்களுக்கு அப்பாலுள்ள ஊரில் ஒரு பொதுத் தோட்டம்.

காலம்: மாலே

[ஆண்களும் பெண்களுமாக அநேகர் உலாவு கிருர்கள். ஒரு புறம் தனியாய் இருவர் அமர்ந்துஅன்றைய தினசரி ஒன்றைப் படித் துக்கொண்டிருக்கிருர்கள். திவான் பகதூ ரைக் கொலேசெய்து விட்டு ஷண்முகநாத புரத்தை விட்டு ஓடிய நடராஜன் உருமாறி

*அழுக்கு நிறைந்த கந்தல் ஆடையுடனும் நீண்ட தாடியிடனும் பைத்தியம்போல் சுற்றி வருகிறன்.]*

**நபர் 1:** *(பத்திரிகையைப் புரட்டிப் பார்த்து ஆச்சரியத்துடன்)* திவான்பகதூர் பொன்னம்பலம் பிள்ளை கொலை வழக்கு நாளைக்குத் தீர்ப்பாமே?

*(நடராஜன் திடுக்கிட்டு அதைக் கவனிக்கிறன்)*

**நபர் 2:** நாளைக்கா? எங்கே அதைப் படியுங்கள்!

**நபர் 1:** *(பத்திரிகையைப் படிக்கிறர்)*

திவான்பகதூர் பொன்னம்பலம் பிள்ளை கொலை வழக்கு

பொருந்தாமணத்தின் கொடுமை!

**கள்ளக்காதலன் குற்றத்தை ஒப்புக்கொண்டான்!**

ஷண்முகநாதபுரம், ஜூன்-2

இன்று இவ்வூர் பிரபல மிராஸ்தார் திவான்பகதூர் பொன்னம்பலம் பிள்ளை கொலை வழக்கு செஷன் ஜட்ஜ் அமானுல்லாகான் அவர்கள் முன் விசாரிக்கப்பட்டது. எதிரி தான் கொலை செய்தது உண்மை என்று ஒப்புக்கொண்டான். எதிரி கொலை செய்ய நேர்ந்த காரணத்தைக் கூற மறுத்துவிட்டான். எதிரிக்கும் கொலை செய்யப்பட்டவரின் நான்காவது மனைவிக்கும் ஏற்பட்ட கள்ளக்காதலே கொலைக்குக் காரணமென்று நம்பப்படுகிறது மேற்படி கொலை வழக்கு சம்பந்தமாய் நாளைத் தீர்ப்பளிக்கப்படுமெனத் தெரிகிறது. (ந. நி.)

*(படித்து முடிக்கும்வரை ஆச்சரியத்துடன் கேட்டுக்கொண்டிருந்த நடராஜன் ஆவேசத்துடன் எழுந்து)*

நட : என்ன கொலை செய்தவன் பாலசுந்தரமா? எங்கே எங்கே! அதைக் கொடுங்கள்! (பத்திரிகையை அவர்கள் கையிலிருந்து வெடுக்கென்று பறித்து மளமளவென்று படித்துக் கீழே போட்டுவிட்டு) ஐயயோ! இதென்ன அனியாயம்? அவன் நிரபராதியாயிற்றே! பாலசுந்தரம் நிரபராதியாயிற்றே! பாலு பாலு......

(ஓடுகிறான்)

நபர் 1 : இதென்ன பைத்தியம்......இது புது மாதிரியாக இருக்கிறதே!

நபர் 2 : லேட்டஸ்டு மாடல் போலிருக்கிறது.

(இருவரும் சிரிக்கிறார்கள்)

---

## காட்சி 36.

---

இடம்: நீதிமன்றம். காலம்: காலை

[வக்கீல்கள், ஜூரர்கள் யாவரும் அமர்ந்திருக்கிறார்கள். பாலு கைதிக்கூண்டில் நிற்கிறான். லீலா, ஜம்பு, போலீஸ் இன்ஸ்பெக்டர், ஜவான்கள் முதலியவரும் இருக்கிறார்கள். உரியகாலத்தில் நீதிபதி வந்து உட்கார்ந்து தீர்ப்பை வாசிக்கிறார். யாவரும் அமைதியாக இருக்கின்றார்கள்.]

நீதிபதி :—

மிகவும் சாதாரணமாகக் கருதப்படும் இந்த வழக்கு என் வரையில் மிகவும் சிக்கல் நிறைந்ததென்றே நினைக்கிறேன். கொலை செய்யப்பட்ட திவான்பகதூர் பொன்னம்பலம் பிள்ளையோ பிரபலஸ்தர். குற்றவாளி என்று கருதப்படும் பாலசுந்தரமோ நேர்மையும் நல்லொழுக்கமும் உள்ள இளைஞர். என் அனுபவத்தில் இத்

தகைய விசித்திரமான குற்றவாளியை நான் இன்றுதான் பார்க்கிறேன். எதிரி தான் கொலை செய்ததாக ஒப்புக்கொள்வதைத் தவிர வேறு எவ்வித பதிலும் சொல்ல மறுக்கிறார்.

சம்பவம் நடந்த அதே சமயத்தில் அதே இடத்தில் கையில் ரத்தம் தோய்ந்த பிச்சுவாவுடன் எதிரி பிடிபட்டதாகவும் கொலை யுண்டவரின் நான்காவது மனைவியாகிய லீலாவுக்கும் பாலசுந்தரத்திற்கும் நட்பு இருந்திருக்க வேண்டுமென்றும் தங்கள் காதலுக்குத் திவான்பகதூர் இடையூறாய் இருப்பதாக நினைத்தே பாலசுந்தரம் கொலை செய்திருக்க வேண்டுமென்றும் சாக்ஷிகள் நிரூபிப்பதாலும், பெரும்பாலான ஜூரர்களும் பாலசுந்தரம் குற்றவாளி என்றே அபிப்பிராயப் படுவதாலும் சட்டப்படி பாலசுந்தரத்திற்கு மரண தண்டனை விதிக்கிறேன்.

**லீலா :** ஹா—! (மூர்ச்சையாகிறாள்; அருகிலிருப்பவர்கள் தாங்கிக் கொள்கிறார்கள்.)

**இன்ஸ்பெக்டர் :** டேய் 203, இந்தப் பெண்ணை ஜாக்கிரதையாக அப்புறப்படுத்துங்கள். (போலீஸார் லீலாவை அப்புறப்படுத்த நெருங்கும் சமயம் இளைத்த தேகமும், நீண்ட தாடியும், எங்கும் கிழிந்து தொங்கும் உடையும், அருவருப்பான தோற்றமும் உள்ள நடராஜன் வீராவேசத்துடன் கூட்டத்தைத் தள்ளிக் கொண்டு பிரவேசிக்கிறான்; ஆச்சரியத்துடன் யாவரும் அவனைக் கவனிக்கிறார்கள்.)

**நட :** நிறுத்துங்கள்! நிறுத்துங்கள்! பாலசுந்தரம் நிரபராதி! அவன் கொலை செய்யவில்லை.........

(கோர்ட்டில் பரபரப்பு உண்டாகிறது.)

**இன்ஸ்பெக்டர் :** யாரடா இவன் பைத்தியக்காரன்? (ஜவானைப் பார்த்து) டேய்! இவனை வெளியில் தள்ளுங்கள்!

(போலீஸ் தள்ள நெருங்க)

**நட :** (ஜட்ஜியைப் பார்த்து) யுவர் ஹானர். நான் பைத்தியக்காரன் இல்லை. தயவு செய்து எனக்குக் கொஞ்ச நேரம் பேச அனுமதி கொடுத்தால் இவ் வழக்கைப் பற்றிய எல்லா விஷயங்களையும் விபரமாகச் சொல்லுகிறேன்.

**நீதிபதி :** ஆல்ரைட். 10 நிமிஷத்திற்குள் இவ்வழக்கைப் பற்றி உமக்குத் தெரிந்ததைச் சொல்லலாம்.

**நட :** யுவர் ஹானர். கொலை செய்யப்பட்ட திவான்பகதூர் பொன்னம்பலம் பிள்ளை எனது தாய்மாமன். அந்தப் பெண் அவரது நான்காவது மனைவி. இறந்து போனவர் என் தங்கையை நாலாந்தாரமாகக் கல்யாணம் செய்துகொள்ள விரும்பினர். நீங்களே யோசித்துப் பாருங்கள். படித்து உலகம் தெரிந்த எந்த வாலிபன்தான் தன் தங்கையை அறுபது வயதுக்கு மேற்பட்ட ஒரு கிழவனுக்குக் கொடுக்கச் சம்மதிப்பான்? ஆகவே நான் அவர் விருப்பத்திற்கு இணங்க மறுத்துவிட்டேன். நான் இருந்தால் அவர் எண்ணம் நிறைவேறா தென்பதை உணர்ந்த பொன்னம்பலம் பிள்ளை, தன் பணத்தையும் செல்வாக்கையும் கொண்டு பல பேரைப் பிடித்து அநேகம் சூழ்ச்சிகளைச் செய்து என்னை ரங்கூனுக்குப் போகும்படி செய்துவிட்டார். நான் சென்ற ஒரு வாரத்திற்குள் என் தாயாரைத் தன் வசப்படுத்தி என் தங்கையின் இஷ்டமில்லாமலே பலவந்தமாகத் தாலிக் கயிற்றைக் கழுத்தில் ஏற்றிவிட்டால், அவள் தன் மனைவிதானே என்ற மூடத்தனமான மனப்

பான்மையுடன் கல்யாணத்தை முடித்துவிட்டார்கள். மணம் முடிந்த பின் என் தங்கை அவர் இஷ்டத்திற்கு இணங்காததினால் அப் பெண்ணை வேறு சில காரணங்களைச் சொல்லி இம்சிக்கத் தொடங்கவே, இம்சை பொறுக்கமுடியாத நிலையில் என் தங்கை எனக்கு எழுதிய ஒரு கடிதத்தின் மூலம் நான் உண்மையறிந்து இந்தியா வந்து சேர்ந்தேன். இது நிற்க. இக்கொடுமை நடப்பதற்குமுன்னே இப்போது தண்டனை விதிக்கப்பட்டிருக்கும் பாலசுந்தரத்திற்கும் என் தங்கைக்கும் பரஸ்பரம் காதல் உண்டு என்பது எனக்குத் தெரியும். ஆகையால் சீர்திருத்தத்தில் ஆர்வம் கொண்ட நான், பாலசுந்தரத்திடம் சென்று இப்போதாவது என் தங்கையை மறு மணம் செய்துகொள் என்று வேண்டினேன். அவன் அதையும் மறுத்துவிடவே, என் தங்கையை வேறுவகையில் காப்பாற்றச் சக்தியற்றவனாய் இருந்தேன்.

இரங்கூனிலிருந்து வந்த அன்றே லீலாவைச் சந்திக்கத் திவான்பகதூர் வீட்டுக்குச் சென்றேன். அங்கு லீலாவின் சரீரமெல்லாம் ரத்தம் பீரிட்டு ஒழுக ஒழுகத் திவான்பகதூர் சவுக்கினால் அடித்துக்கொண்டிருப்பதைக் கண்டேன். தடுத்த என்னை, அவர் வேலையாட்களைக் கொண்டு வெளியில் தள்ளச் செய்தார்; பொறுமையை இழந்தேன்.

எப்படியும் அப்பெண்ணை அக்கொடியோனிடமிருந்து காப்பாற்ற வேண்டுமென என் மனம் துடித்தது. வேறு வழியில்லை. மரணத்தைத் தவிர வேறு வழியில் அவளுக்கு விடுதலை இருப்பதாக எனக்குத் தெரியவில்லை; அவள் இறந்தால் அதற்குப் பொறுப்பாளி யார்? பொன்னம்பலம் தான்.

ஆகையால் அவரையும் கொன்று விட்டு நானும் இறந்து விடுவதாகத் தீர்மானித்தேன்.

பிறகு அன்று இரவே திவான்பகதூர் வீட்டுக்குப் போம், பொறுக்கமுடியாத ஆத்திரத்தோடும், ஆவேசத்தோடும், என் தங்கையையும், இன்னும் எத்தனையோ ஆயிரக்கணக்கான பெண்களையும் கெடுத்த திவான்பகதூர் பொன்னம்பலம் பிள்ளையைப் பிச்சுவாவினல் குத்தினேன். இதற்குள் என் தங்கையும் விழித்துக்கொள்ள அதே சமயம் எனக்குப் பின்னல் யாரோ ஓடிவரும் சப்தமும் கேட்கவே என்ன செய்வதென்று புரியாத நான் பீதியுடன் பிச்சுவாவை அங்கேயே போட்டுவிட்டு ஓடி விட்டேன். பிறகு இங்கு நடந்ததொன்றும் எனக்குத் தெரியாது.

ஓடிய நான் ஊர் ஊராக அலைந்து திரிந்தேன். பசி, தாகம், இன்பம், துன்பம், வெய்யில், மழை எதைப் பற்றியும் கவலையின்றி நடைப் பிணமாய் அலைந்து கொண்டிருந்தேன். எதிர்பாராத விதமாய் நேற்று மாலை பத்திரிகை மூலம் இவ்வழக்கு சம்பந்தமாய்ப் பாலசுந்தரம் தண்டனை யடையப் போகிற விஷயம் அறிந்து நிரபராதியாகிய பாலுவைக் காப்பாற்ற 70 மைல்களை ஓட்டமும், நடையுமாகக் கடந்து எப்படியோ இங்குவந்து சேர்ந்தேன். உண்மை இதுதான். ஆகையால் சமூகத்தில் தீர விசாரித்து உண்மைக் குற்றவாளியாகிய என்னைத் தண்டித்து நிரபராதியாகிய பலசுந்தரத்தை விடுதலை செய்ய வேண்டுமாய்க் கேட்டுக் கொள்கிறேன்.

நீதி : மிஸ்டர் நடராஜன் சொல்லுவதெல்லாம் உண்மையாயிருப்பின் நிரபராதி ஒருவனைத் தண்டித்த அபவாதத்திலிருந்து ஆண்டவன் என்னைக் காப்பாற்ற

வேண்டுமென்று பிரார்த்திக்கிறேன். வல்லமை மிக்க அரசாங்கத்தின் பிரதிநிதி என்ற முறையில் நியாயாதிபதியாய் அமர்ந்து நான் பாலுவைக் குற்றவாளியெனத் தீர்மானித்துத் தூக்குத் தண்டனையும் அளித்து விட்டேன். தண்டனைக் காலத்தை இன்னும் சில நாள் ஒத்திவைக்க ஏற்பாடு செய்கிறேன். பாலுவின் சார்பில் வழக்கை மேல்கோர்ட்க்கு அப்பீல் செய்தால் அநேகமாக வழக்கு பாலுவுக்குச் சாதகமாகத் தீர்ப்பளிக்கப் படலாமென நினைக்கிறேன். இந்த வழக்கு சம்பந்தமாக மேற்கொண்டு நடவடிக்கை எதுவும் நான் எடுத்துக்கொள்ள முடியாதிருப்பதற்காக வருந்துகிறேன்.

---

## காட்சி 37.

---

**இடம் :** அந்தமான் தீவு. **காலம் :** இரவு.

**பாத்திரங்கள் :** சின்னக் கைதி, பெரிய கைதி.

[ஆரம்பக் காட்சியின் தொடர்ச்சி. மறுபடியும் அந்தமான் தீவில் கைதிகளின் சம்பாஷணை]

**சின்னக் கைதி :** பிறகு வழக்கு அப்பீல் செய்யப்பட்டு லீலாவையும், பாலுவையும் பிரித்துவிட வேண்டுமென்மதற்காக, திவான் பகதூரிடம் வேலைக் கமர்ந்து திவான்பகதூருக்குத், தூபம்போட்டுக் கல்யாண ஏற்பாட்டை ஆரம்பித்து எங்கள் வீட்டை ஏலத்துக்குக் கொண்டு வந்து, என்னை ரெங்கோனுக்குக் கடத்தி, என் தாயை மயக்கி, பாலுவுக்கும் லீலாவின் மேல் வெறுப்புண்டாகச் செய்து திவான்பகதூருக்குக் கல்யாணம் முடித்து, முடிவில் லீலாவைத் தானே

அடைய வேண்டுமென அசுர முயற்சியும், சூழ்ச்சிகளும் செய்த அதே ஜம்பு, தன் தவறுகளை உணர்ந்து வருந்தி, அதற்குப் பிராயச்சித்தமாகவேனும் பாலுவை விடுதலை செய்து, லீலாவையும், பாலுவையும் சதிபதிகளாக்கிப் பார்க்க வேண்டும் என்ற தியாக புத்தியோடும் தீவிர வைராக்கியத்தோடும் தன் பிதுரார்ஜித சொத்துக்கள் யாவையும் அப்பீல் வழக்குக்கே செலவழித்து வழக்கை வெற்றியடையச் செய்தான். லீலா, பாலு இவர்களை ஒன்று படுத்தி வைக்க வேண்டியதே தனது வாழ்க்கையின் லக்ஷியமாகக் கொண்ட ஜம்புவின் தியாகம் என்றும் மறக்க முடியாதது.

(இது சமயம் தன்னை மீறி வரும் கண்ணீரைத் துடைத்துக் கொள்ளுகிறான்.)

பிறகு பாலசுந்தரம் விடுவிக்கப் பட்டான். குற்றத்தை நானே ஒப்புக் கொண்டதற்காகத் தூக்குத் தண்டனையை மாற்றித் தீவாந்திர சிக்ஷை விதிக்கப்பட்டு நான் இங்கு வந்தேன்.

**பெரிய கைதி:** (பெரு மூச்சிட்டு) அப்படியானால் அந்தப் பையன் பாலுவுக்கும் உன் தங்கைக்கும் மறுபடியும் கல்யாணம் ஆகிவிட்டதா?

**சி. கைதி:** எனக்குத் தெரியாது. ஆனால் அதுதான் என் மனப்பூர்வமான ஆசை. அதற்காகத்தான் நான் இப் பிறவியில் கொலைகாரனென்ற பழியையும் தேடிக் கொண்டேன். இன்றும் அதற்காகத்தான் இந்தச் சிறைச்சாலையிலே தவமிருக்கிறேன். என்னிலும் பன் மடங்கு தீவிர வைராக்கியம் கொண்ட ஜம்பு அங்கு இருக்கும்போது அவர்கள் மறுமணம் இதுவரை தாமதித்திருக்க முடியாதென்றே நினைக்கிறேன்.

(நீண்ட பெருமூச்சு, மேலே பார்த்து) இன்ப அலை களை இதயத்தில் எழுப்பும் பூரணச் சந்திரன் பொலி வுற்றுத் திகழும் இந்த இரவில்கூட அவர்கள் ஆனந்தமாய்த் தங்கள் மறுமணத்தால் புத்துணர்ச்சி பெற்ற புது வாழ்க்கையை நடத்துவார்கள். (கண் களை மூடிப் புன்முறுவல் தவழ) ஆம், நடத்துவார் கள்; அனுதினமும் என் மனக்கண்ணுல் அவர்கள் உல்லாஸ வாழ்க்கையின் இன்பக் கனவைத்தான் காணுகிறேன். இதோ! இதோ பாருங்கள். இப் பொழுதுகூட அதே இன்பக் காட்சிதான்!

(கண்ணை மூடிக்கொண்டே வெட்ட வெளியைக் காட்டிப் பைத்தியம்போல் அதோ! அதோ! என்று தனக்குள் மகிழ்ச்சி அடைகிறுன்.)

**பெ.கைதி:** ச்சு—ச்சு—ச்சி (பெருமூச்சிட்டு) ஐயோ! பாவம், ஒரு பெண்ணுல் உன் வாழ்க்கையே கெட்டு விட்டதே!

**சி.கைதி:** இல்லை, இல்லை! தாத்தா. நான் கெட்டதற்குக் காரணம் அந்தப் பெண்ணு? சற்று யோசனை செய்து பாருங்கள்.

**பெ.கைதி:** பின்னே என்னப்பா?

**சி.கைதி:** இப்படிபட்ட அக்ரமங்களுக்கெல்லால் இட மளிப்பது நம் இந்து சமூகமல்லவா? வேறு எந்த நாட்டில் இந்தக் கொடுமைகள் நடக்கின்றன? (சற்று மௌனம், பெருமூச்சு) இருந்தாலும் தாத்தா எனக்கு இப்போது ஆனந்தமாய்த்தான் இருக்கிறது. என் வாழ்க்கையின் லட்சியத்தை நிறைவேற்றி விட்டேன். இன்றைக்கு என் தங்கை தன் காதலனேடு இன்ப வாழ்க்கை நடத்துவாளென்பது திண்ணம். எங்கள்

கதையைக் கேட்ட இளம் காதலர்களும் அவரவர் களின் வாழ்க்கை லட்சியத்தில் வெற்றிபெற்று இன்ப வாழ்க்கை வாழ்வார்களானுல், அதுவே போதும்; அதுதான் என் ஆசை! அதுதான் நான் இந்த ஜென்மத்தில் கடவுளிடம் கோரும் கைமாறு. என் தங்கையைப் போன்ற இந்நாட்டு இளம் சகோதரிகள் சுகமடைவதற்காக, இந்தியத் தாயால் ஈன் றெடுக்கப்பட்ட நான் இந்த அந்தமான் தீவில் ஒரு கைதியாக இருப்பதில் எனக்குத் திருப்திதான். என்னைப் பார்த்தாவது இந்நாட்டுத் தாய் தந்தை மார்களுக்குப் புத்தி வந்தால், அதுவே இந்த அந்த மான் தீவை எனக்கு இந்திரலோக மாக்கிவிடும்.

**பெ.கைதி:** அப்பா! நீ பெரிய வைராக்கியசாலிதான், உம் சரி-நாழிகை அதிகமாகிவிட்டது. வார்டர் தேடுவார், வா போகலாம்.

(போகிருர்கள்.)

சுபம்